உ

சிவமயம்.

கணபதிதுணை.

# மாயூரப்புராணம்.

திரிசிரபுரம் மஹாவித்துவான்

மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

இஃது

இந்நூல்செய்தவர்மாணாக்கருளொருவராகிய

சென்னைக்கவர்ன்மெண்டு நார்மல்பாடசாலைத்

தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்

சோடசாவதானம்

சுப்பராயசெட்டியாரால்

பார்வையிடப்பட்டு,

மாயூரத்திலிருக்கும் அரங்கக்குடி

முருகப்பிள்ளையவர்கள்குமாரர்

வயித்திலிங்கம்பிள்ளையவர்களால்

சென்னை

சி. டிக்ருஸது,

மயிலைச்சாலையிலிருக்கும் அத்திநீயம் அன்ட் டேலிநியூஸ் பிரான்ச்

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

விபவஹு கார்த்திகைமீ



உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்

## மாயூரப்புராணமரங்கேற்றுவித்தவர்மேல்

சென்னைக்கவர்ன்மெண்டுநார்மல்பாடசாலைத்தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்.

சோடசாவதானம்

## சுப்பராயசெட்டியார்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்பூத்தபல்வளமுமல்குபெரும்பூங்குடியிற்செழித்துவாழ்வோ
னேர்பூத்தகனதனவானெனத்தவனாத்தாறுக்குமியல்பின்மிக்கான்
பேர்பூத்தசோணாட்டுவேளாளர்குலதிலகன்பிறங்குசீர்த்தித்
தார்பூத்தசைவசிகாமணிகருணைசிதம்பரமாறவத்தில்வந்தோன். (க)

மாமேவுபல்கலையுநன்னூலிவிற்கற்றுணர்ந்தவாய்மைதேர்ந்து
பூமேவுமன்னவர்தங்கண்மணியாயதொரப்பொலிவின்மேவித்
தேமேவுகண்ணோட்டமுதற்பலநற்குணத்தாலுந்திறந்துவாழ்வோ
னேமேவுமந்திரமென்றோருஞ்சரவணபவப்பெருந்தவள்ளல். (உ)

அகழேறுமணிப்புரிசையாணேறுசிராப்பளியினகத்துமோவா
விகழேறுமெனதிதயத்தகத்துமென்றுமிடையறாதுறைவோன்மெய்ம்மைப்
புகழேறுநயபிபுலன்பொறையேறுமிருங்குணத்தோன்புவனிமீது
இகழேறுமீனாட்சிசுந்தரநாவலரேறுசிந்தையோர்க்கு. (௩)

துன்னியபாவலர்களிப்பவியற்றுதிருமயிலாடுதுறைப்புராண
மன்னியமாண்பியமுமதன்சொற்சிறப்பும்பொருட்சிறப்பும்வயங்கத்தேர்ந்து
மின்னியபேரருள்வள்ளல்சந்நிதியில்யாவர்களும்விரும்பமேவி
நன்னியமத்தலையெடுப்பவரங்கேற்றுவித்தனவாநலம்பெற்றானே. (௪)





# சிறப்புப்பாயிரம்.

இப்புராணஞ்செய்யுங்காலை

யுபசரித்தவர்மேல்

சென்னைப்ப்ரீசர்மிஷன்பாடசாலைத்தமிழ்ப்பண்டிதர்

## தெய்வசிகாமணிமுதலியார்

இயற்றியது.

கலிவிருத்தம்.

சேதனவாழ்க்கையர்கள்செறிதிகழ்மாயூரத்தமர்வான்
கோதமையவொன்றுதகூடலுடைக்கோத்திரத்தான்
மாதயவான்கோவிந்தவள்ளறவத்தினிலுதித்த
மேதகையமிகுகுணத்தான்வேங்கடாசலமகிபன். (௧)

நல்லகுணவிபவத்தோனல்லநெறிவழுவாதோன்
பல்லநூலொருங்குணர்ந்தோன்பல்லநூலொருங்கியற்றும்
வல்லஞானவல்லோர்வயங்குறவோர்க்கிணையனைச்
சொல்லவருமீனாட்சிசுந்தரநாவல்லோனே. (௨)

ஆயசீர்மயிலாடுதுறைப்பெருமான்மான்மியமாம்
பாயபாயிரமாதிசைமிசத்துப்பண்ணவர்வந்
தேயபூசனைபுரிதலீறாகப்பாடளவு
நேயமுடனுபசரித்தானிரம்புபுகழ்பெற்றனனே. (௩)



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மாயூரப்புராணம்.

## கடவுள் வாழ்த்து.

### அகத்தியவிநாயகக்கடவுள்.

* பூமேவுதன்னடியார்தமைவிளக்கிமுந்திருக்கைபுணர்த்தல்வல்ல
தேமேவுபெருங்கருணையாளனெனாறெரிப்பமறைத்திருநாமங்கள்
பாமேவுபலவிருக்கவகத்தியமால்களிறெனும்பேர்பரித்துநாளு
மாமேவுமயிலாடுதுறைத்தளிவாழ்பெருமானைவணக்கஞ்செய்வாம். (௧)

### பெரியவிநாயகக்கடவுள்.

* மன்னியபேருருவாய்ந்தமதாசலமாமுடிமேக்குமறாத *நாமே
துன்னியபேருருவாய்ந்தபூதத்தினடிகிழக்குந்தோய்தற்கேற்ப
மின்னியபேருருவாய்ந்துபெரியவாரணமெனும்பேர்விளங்கப்பூண்டு
பன்னியபேருருவாய்ந்தமாமயிலைத்தளியமரும்பரன்றாள்போற்றி. (௨)

### வதானியீசர்.

சீர்பூத்தவிமையாரும் * அமையாருந்தோட்சசிசேர்செல்வவேந்தும்
பார்பூத்ததிருவானும்பெருவானும்புகழ்புரவுபண்ணுவானுங்
கூர்பூத்தவேனாருந்தேனாருமலர் * இறைப்பக்குறித்தநல்கி
யேர்பூத்தமயிலாடுதுறையமரும்வள்ளலாரிருதாள்போற்றி. (௩)

### குதவனேசர்.

இச்சையறிவுறுதொழிலாய்ப்பனையாதியாதியாயெண்ணிலாத
விச்சைசெயாரணிமுதலாய்ச்சத்திவிந்துவாதியாய்வேறாயின்னு
மச்சையினிதோம்பிவானளவாதகருணையிற்பல்லண்டமீனும்
பச்சைமயில்போற்றெடுக்கமாவடிவீற்றிருப்பாளைப்பரவிவாழ்வாம். (௪)

### அபயப்பிரதாம்பிகை.

பரவுபிறரபயவர்தம்புனைந்தும்பாவனையாம்படியானாணை
விரவுமிகுமவைமலர்க்கையமைத்தமைத்தபடியகிலவுயிர்க்குமாற்றிக்
கரவுதவிர்தரவனையவுபயமேதிருப்பெயராய்க்கதிர்ப்பப்பூணுற்
றரவுமதிபுனைவார்பாலயரஞ்சனாயகிதாளடைந்துவாழ்வாம். (௫)

---

* அடியாரைவிளக்கஞ்செய்து தேவர்முதலியயாவரினுமுந்தி யிருப்பச்செய் தல்தோன்ற, விநாயகக்கடவுள் திருநாமம் பலவிருக்கவும், தமது திருப்பெயர் முன், அடியார்பெயர்கொண்டாரென்பது கருத்து.

* முடியும், அடியும், யானையும் பூதமுமாகிய பேருருவங் கோடலால், அ தற்கேற்பப் பெரிய விநாயக னெனத்திருப்பெயர்பூண்டு, அத்திருவுருவிற் கேற் பப் பெரிய கோயிலி லெழுந்தருளினானென்பது கருத்து.

* நாம் அச்சம் "பேநாமுரு மெனவரூஉங்கிளவி, ஆமுறைமூன்று மச்சப் பொருள" தொல்காப்பியம் உரியியல், ௬௧. சூத்திரத்தானுணர்க.

* அமை, மூங்கில்.

* தேனாருமலர் வண்டாராயுமலர்.

## இடபவுமை.

பரந்தமலர்க்கருங்குழலுஞ்செவ்வாயும்வெண்ணகையும்பசுவேய்த்தோளுஞ்
சுரந்தவருள்பொழியுமிருவிழியுமெழில்வழிமுகமுந்துணைப்பொற்றோடுங்
கரந்தநிருவிடையுமொண்செம்பட்டுடையுமங்கலப்பொற்கழுத்துநாளு
மிரந்தவருக்கருளுஞ்சரணுயகிநூபுரப்பதமுமிறைஞ்சிவாழ்வாம். (சு)

## மயிலம்மை.

வாவிபொலிபிரமவனமாயூரமெனுமொருபேர்மருவியோங்கத்
தூவியனமுணராதமுடிச்சரபமொருமயிலாத்தோன்றியாங்கு
மேவியமர்தருவிடபமரங்கமாநடம்புரியவிழைந்துநோக்கி
யோவியெலாம்* முனமகிழ்பூத்தமர்ந்துதொழும்பசுமயிலையுன்னிவாழ்வாம்.(எ)

## சபாநாயகர்.

மாடுவானகைநோக்கநாடுவானவர்பலரும்வணங்கிவாழ்த்த
வூடுவான்பொழிவதெனப்பாடுவான்புலவர்துதியுரைப்பயாமு
நீடுவான்முதலியவையோடு* வான்வளிபொருவல்* நீத்தானந்தங்
கூடுவானம்பலத்துளாடுவான்குஞ்சிதத்தாள்குறித்துவாழ்வாம். (அ)

## சிவகாமியம்மை.

கரமூன்றுமடியிரண்டுஞ்சிருட்டிமுதலைந்தொழிலுங்கதிப்பவாற்றச்
சிரமூன்றுநான்குமுளார்சேவிப்பவெண்முறுவல்செவ்வாய்த்தோற்றிப்
புரமூன்றுமெரித்தார்செய்நடங்காண்டல் *அதுவலிக்கப்போதல்* ஆய
விரமூன்றுமிரண்டனுக்கும்வினைமுதலாம்பராபரைதாள்சேர்ந்துவாழ்வாம். (கூ)

## தட்சணாமூர்த்திக்கடவுள்.

மான்மலரவன்முன்னோர்தொன்முதலெனவழுத்தற்கேற்பச்
சூன்மலர்கருணையாலோர்தொன்முதல் * அமர்ந்தான்மாக்கள்
கான்மலரடங்குமுண்மைகைமலர்க்காட்சியாலே
தான்மலர்தரத்தெரிக்குந்தம்பிரான்சரணஞ்சார்வாம். (ய)

## வயிரவக்கடவுள்.

ஓங்குசொற்படைமுன்னஞ்சுமொள்ளுகிர்ப்படையுந்தேசு
வீங்குசக்கரமுன்னனவெம்படையஞ்சுமஞ்சுந்
தாங்குசூற்படையுங்கொண்டோர்தலைக்கலநெய்த்தோரேற்ற
பாங்குசேர்வடுகப்புத்தேள்பதமலர்க்கன்புசெய்வாம். (கக)

---

* முனமகிழ், மயிலுருவங் கொள்ளாமைக்கு முன்னமே திருநடனங்கண்டமகிழ்ச்சி.
* வான்முதலியவை, ஆகாயமுதலியதத்துவம் ௩௬.
* வான்வளிபொருவல், ஆகாயமுங்காற்றும்போலத் தத்துவங்களோடு, அபேதமாவிருக்கை.
* அது, காண்டலைக்குறித்த குறிப்பு வினைமுற்றுப்பெயர்.
* வலிக்கப்போதல், காட்டல்.
* தொன்முதல், ஆலடி.

### மாணிக்கவாசகசுவாமிகள்.

பரமனைப்புறந்தழீஇமுன்பாற்கவடுறுத்தான்போலா
துரவகந்தழீஇயன்னான்மண்சுமந்துழன்றடியொன்றேற்றுக்
கரவின்மேல்கீழ்பின்னனென்னக்கறைதருமொருமூப்பாலுந்
திரமுறுகவடுகொண்மார்திகழ்ந்தவர்க்கன்புசெய்வாம். (உ0)

### தண்டீசநாயனார்.

பாதகவரக்கற்கொன்றுபடுபழியலைக்கப்பட்டு
ரோதகவடைந்துதீர்ந்தநோன்சிலையிராமனுண
மேதகவந்தணாளனுருயிர்வீயமாய்த்து
மாதகவமையுமுத்திமருவினார்சரணஞ்சார்வாம். (உக)

### அறுபத்துமூன்றுநாயன்மார்.

தகைபெறுமுண்மைவாய்ந்ததஞ்சரித்திரமேயாய
தொகைவகைவிரியோர்மூன்றுந்தொழுபெரியோர்க்குச்சொற்ற
பகைதவிர்குரவனுவான்படர்சடைப்பிரானேயாக
நகைசொனுமறுபான்மூவர்நறுமலர்ப்பாதம்போற்றி. (உஉ)

### பஞ்சாக்கரதேசிகர்.

வினையொடுமிருளனுதிமேவியசெயலைநீக்கி
யனையினுமுயிர்க்குநல்கியாவடுதுறைக்கண்மேய
தனைநிகர்நமச்சிவாயகுருபரன்சரணஞ்சார்ந்தார்
புனைமலரடியென்சென்னிக்கணியெனப்பொலியுமன்றே. (உஙு)

### குருவணக்கம்.

வடுவகிர்க்கண்ணாராசைவலைப்படார்செறிகோமுத்தித்
தொடுகடலுலகமேத்துஞ்சுப்பிரமணியதேவ
னெடுகலந்தமராநிற்குமொருவனம்பலவாணப்பேர்
கொடுவருசிவனென்னெஞ்சங்கொண்டனன்குறிப்பதெங்கே. (உச)

### மற்றையடியார்கள்.

மன்னியமாமயிலாடுதுறைத்தளியுள்வள்ளலார்வயங்குசீர்த்தி
பன்னியநாவுடையரகம்படித்தொண்டினெறிநிற்போர்பரவுநீறுந்
துன்னியகண்மணித்தொடையுமைந்தெழுத்தும்பொருளாகத்துணிந்தோராய
முன்னியவிந்தியமொவராயினுமற்றவர்சரணமுடிக்கொள்வாமே. (உரு)

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

---

## அவையடக்கம்.

---

தண்ணியநீராவடுதண்டுறைநமச்சிவாயகுருசாமிபொற்று
ளெண்ணியசிந்தையன்கௌரிமாயூரப்பெருமான்கட்டளைமேற்கொண்டு
புண்ணியமேன்மேலுயரவளர்ப்பவனற்குணசீலன்பொறையிற்கூர்ந்தோன்
மண்ணியமாமணிமுத்துக்குமாரமுனிவரனருட்கோர்வைப்பாயுள்ளான். (க)

வடமொழியிருந்ததெய்வமாபுரமான்மியத்தைத்
திடமொழிபெயர்த்தெடுத்துச்செந்தமிழ்மொழியாலின்பம்
படமொழியென்னைவன்றொண்பணித்தசொன்மறுத்தற்கஞ்சித்
தடமொழிப்புலவர்முன்புசாற்றிடத்துணிந்தேன்மன்னோ. (௨)

நன்மொழியமைந்தசான்றோர்கூடுமந்நகருள்யானென
புன்மொழிகொண்டுசேறல்புவனங்களெடுத்துப்பேசும்
வன்மொழியமைந்தசாகிமலர்பயிலிடத்துநன்மை
யன்மொழியொருவனொல்லாவருக்கங்கொண்டணைதல்போலும். (௩)

தண்ணியவிமயப்பச்சைமயில்செய்பூசனைதழீஇய
புண்ணியமுதல்வன்காகபூசையுந்தழீஇயவாற்ற
லெண்ணியபெரியோர்செய்யுமினியபாவேற்றலோடு
மெண்ணியஞானமில்லேன்பாடலுங்கைக்கொள்வானால். (௪)

இலைமலர்தாங்கப்பட்டவிருவருமிறைஞ்சும்வெள்ளி
மலையவன்பெருமைக்கேற்றபாக்கொணின்வாய்ப்பாட்டென்னிற்
புலைமுடைத்தோலும்பாம்பும்புன்றலைத்தொடையுமென்பு
மலைவின்மற்றணையாற்கேற்றவாடைபூணுமோசொல்லீர். (௫)

நன்மொழியியலுணர்ந்தோர்நாயினேன்புகன்றபாடல்
* அன்மொழியாவதேனும் * அல்வழியாவதேனும்
புன்மொழிப் * போலியேனும்வேற்றுமைபொருந்திற்றேனும்
வன்மொழிபுகன்றுதள்ளலாவதோர்வழக்குமுண்டோ. (௬)

பரசிவபுராணமென்னும்பத்திசற்றேனுமில்லார்
விரவுவகுற்றமென்றுவிளம்புவரெவர்சொற்றாலு
மரவணியணையானிந்தையறையவுந்துணியுமந்தக்
கரவொன்கவிக்குக்குற்றங்கழறலோரிலும்பூதன்றே. (௭)

வாரியுட்கலந்தபுன்னீர்வாரிநீரேயாகுஞ்
சீரியபயங்கலந்ததீர்த்தமும்பாலேயாகும்
வேரியங்கடுக்கையண்ணன்மான்மியம்விரவாநின்ற
பூரியனுமென்சொல்லும்புனிதமாய்ப்பொலியுமன்றே. (௮)

ஒடுங்கலில்குரவனாகியுண்மைபோதிக்குமம்மா
னெடுங்கணக்குணராரொல்லாநிகழ்தருகுரவனென்றோர்
படும்பெயர்பூண்டுமண்மேற்பயிலவும்வெறுத்திலான்கை
விடுந்திறமுணராரொன்சொன்மேலவானார்நாளும். (௯)

அவையடக்கம் முற்றிற்று.

## சிறப்புப்பாயிரம்.

ஆன்றுதிரைக்கருங்கடல்சூழ்புவிபுகழுமயிலாடுதுறைப்புராணம்
பன்னுவடமொழிநின்றுமொழிபெயர்த்துத்தென்மொழியிற்பாடித்தந்தா
னுன்னுசிவஞானகலைமுதலாயபல்கலையுமொருங்குதேர்ந்தோன்
மன்னுதிரிசிரபுரம்வாழ்மீனாட்சிசுந்தரநாவலவரேறே. (௧)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம். ௧௦

* அன்மொழி-தீயமொழி. * அல்வழி-தீயவழி. * போலி-உட்பொருளின்மை.

# திருநாட்டுப்படலம்.

அரவுவார்சடையெம்வள்ளலாருயிர்ப்பொருட்டுவாசக்
குரவுவார்கூந்தற்செவ்வாய்க்கோற்றொடியோடும்வைகும்
பரவுவார்மயிலைமுன்னாப்பயிறலந்தன்னுட்கொண்டு
விரவுவார்சோழநாட்டின்வளஞ்சிலவிளம்பலுற்றாம். (க)

பூவினுட்பதுமம்போலும்புருடருட்டிருமால்போலுங்
காவினுட்கற்பம்போலுங்கலைகளுண்ஞானம்போலு
மாவினுட்சுரரான்போலுமறத்துளில்லறமேபோலு
நாவினுண்மெய்ந்நாப்போலுநாட்டினுட்சோழநாடு. (உ)

மேக்குநீர்கிழக்குநீரொன்றுனாயிருநீருமேன்மே
லாக்குவாய்ப்புடையதாயவிலங்கலுமதனினின்று
தாக்குமாவாராநின்றதண்ணீரும்வடிவுதீர்த
னீக்குமாநகருமென்றுநிரம்பவுள்ளதுசோணாடு. (ங)

குன்றலில்விளைவுசெய்யுங்குடிகளுந்துறவுபூண்ட
நன்றறிபவருமந்தணாளர்முன்னாயினோருந்
துன்றவன்கலத்திற்பண்டிகளிற்பொருடொகுக்கும்வாழ்க்கை
யன்றலிலாருஞ்சேரவமைந்ததுவளவநாடு. (ச)

பெரும்பொருளுடைமையாலேயாவரும்பெட்பதாகி
யரும்புமோர்கேடுமின்றியாற்றவும்விளைவதாகி
வரும்பொறையனைத்துந்தாங்கிமன்னவற்கிறையுமுன்போற்
றரும்புகழுடையதம்மாதவாப்புகழ்ச்சென்னிநாடு. (ரு)

மயின்முதலுருவந்தாங்கிமலைமகளாயவன்னை
பயிலவும் * மந்திரங்கள்பல்லசொண்டேழியோங்குங்
கயிலையெம்பெருமான்மேவிக்கலப்பவுந்தவஞ்செய்தன்று
லெயில்வளைநகரமெங்குமியைதருமபயநாடு. (சு)

நோக்கியவிடங்களெல்லாநுவலருந்தலங்களாகத்
தேக்கியதீர்த்தமாகச்சிவலிங்கமூர்த்தியாக
வாக்கியதவத்தாளுமடைந்தவர்க்கறமென்றேனும்
பாக்கியமாக்கிமேலுய்ப்பதுமுதுசென்னிநாடு. (எ)

மறைநெறிதிறம்புவாரையாகமமறவியாரை
முறைதபவொழுகுவாரைமொய்பழிப்பொருள்வேட்பாரைக்
குறைபறவிருந்தோம்பாரைக்குறித்தனகொடாரைமுங்க
ணிறையடிபூசியாரையில்லதுகிள்ளிநாடு. (அ)

திருமிகப்பெருகலாலேதீயவெம்பசியுங்காலப்
பருவரலின்மையாலேபாறுருநோயுமன்னற்
கொருவரும்படையினாலேயுடற்றுவெம்பகையுமில்ல
திருநிலம்புகழநாளுமியைந்தசெம்பியர்தநாடு. (கூ)

---

* மந்திரம் = கோயில்.

தலையமைசென்னிநாடுதவாவகளங்கநா டு
நிலைபெறுமபயநாடுதிரம்பியவளவநா டு
தொலைவிலாப்பெருநீர்நாடென்றின்னமுஞ்சொல்லப்பெற்று
மலைவிலாப்பயன்செய்நாடுமற்றிதுபோலொன்றுண்டோ. (௰)

வேறு.

பொங்குவெண்டிரைக்கங்கைமேற்படர்ந்ததுபோலத்
தங்குவெண்முகில்வான்வழிப்படர்ந்திறைச்சயிலம் *
* மூங்குதண்கடற்புனல்கொளீஇக்கருநிறமுற்றி
யங்குநின்றுகாளிந்திபோந்தென்னவானணைந்த. (௧௧)

வாரியஃகுமாமால்குடித்தெழுநிறமதிக்கின்
வேரியந்தொடைத்தம்பிறையாகியவேந்தன்
மூரிவெம்பகைவளையமரிடங்கண்டுமுற்றிச்
சேரிசிந்திடப்பறையரிவான்செயறுணையும். (௧௨)

விதிக்குமாற்றல்செய் * கருமுகில்வாணனாய்மின்ன
றுதிக்குமங்கதிர்காளிந்தியெனுமொருதோகை
மதிக்குமேனியிற்பொற்பணிபுனையமற்றவைதாங்
கதிக்குமாறவண்மெய்நின்றுமின்னுதல்கடுக்கும். (௧௩)

முற்றுருற்பெருங்கொண்டல்கள்வானின்றுமுழங்க
லெற்றுதெண்டிரைநதிகளின்விளக்கமிக்கிவைத
னுற்றுலாங்கதிர்ப்பால்வருதன்சிறப்புன்னி
மற்றுமேற்படர்காளிந்திமுழங்குதன்மாணும். (௧௪)

மீதுமுடியபயோதரம்வேனில்வெப்பழிய
மோதுவாமெனமுனிதரல்கூற்றொடுடம்பிறந்த
மாதுமாநதியாதலிற்காளிந்திமாருத்
தீதுநோக்குபுதண்டிக்கமுயல்வதுவெனும். (௧௫)

கருநிறங்கொள்காளிந்தியோர்பாதியிற்கலப்பப்
பொருவில்குங்குமம்பூசிடப்பொலிதருநுதல்போல்
வெருவில்வானகமெங்கணுமுடியமேக
மொருவில்வாங்கியதுகடுங்கோடைபோயொளிப்ப. (௧௬)

உள்ளமாதிபல்லுயிருறுபெருவெப்பங்
கொள்ளவேனில்செய்கொடுமையுட்குறித்தகாளிந்தி
மெள்ளமெய்வெயர்த்திடவெயர்விலைத்துவீழ்ந்தென்னத்
தள்ளரும்பலைநிறைதிசைசலதரமே. (௧௭)

வெப்புநோய்செயும்வேனிலைவீட்டுவனென்று
பப்புகாளிந்திபல்வழிக்கொண்டுபாரிறங்கு
மப்பெருந்திறமெனவள்ளலாருளென்னச்
செப்பருஞ்சலதரம்பொழிந்தனசெழுமழையே. (௧௮)

---

* இறைச்சைலம் - சிறையையுடையமலை.
* மூங்கு - மூழ்கற்பொருளுணர்த்துமுதனிலைத்தொழிற்பெயர்.
* விதிக்குமாற்றல்செய் - பிரமனுக்குஞ் சிருட்டிவலிகுறையும்.

மலைகளெங்கணும்பொழிந்தனமரஞ்செறிகான
நிலைகளெங்கணும்பொழிந்தனநிரம்புகாலோடைத்
தலைகளெங்கணும்பொழிந்தனதாழையங்கழிசூ
ழலைகளெங்கணும்பொழிந்தனவள்ளியரருள்போல். (௧௯)

செய்யகோல்வலியரசுசீர்த்தெழுதருகாலை
வெய்யகோலுடைக்குறும்புமாய்ந்தொடுங்குறுவிதம்போற்
பொய்யுறுமுகில்பொழிந்தநீர்பரவுறுகாலை
யெய்யுறுவிளைத்தொடுங்கினவேனில்வெப்பெங்கும். (௨௦)

கொண்டலாகியகவுணியகுலத்திளங்கன்று
கண்டல்சேர்புனற்கடலெனுங்கௌரிதன்முலைப்பா
லுண்டல்செய்தரும்பாமழைபொழிதலாலொழிந்த
மண்டல்கொண்டதீவேனில்வெப்பெனும்பரமதமே. (௨௧)

வரைநிரம்பினவருவிகான்யாறுபன்மரஞ்சார்
தரைநிரம்பினவோடைகாலேரிகடவாச்செய்
நிரைநிரம்பினநெய்தலங்கைதைசூழ்வேலித்
திரைநிரம்பினசிறுமணற்கேணிமிக்கூறி. (௨௨)

தரையடங்கலுமழைபொழிவெள்ளநீர்தவழ
வுரைசிறந்தபைம்புற்களங்குரித்தனவொருங்கு
விரைநறுங்குழன்மண்மகள்வெப்புநோய்தீர்ந்து
புரைசெய்பைம்படாங்குளிர்தபப்போர்த்ததுபொருவும். (௨௩)

விண்டபல்கமர்வெள்ளநீர்புகுதரவொன்றிக்
கண்டதேமெலாமேல்வழிந்தோடுமாகாணுங்
கொண்டனீர்தரைக்கேயன்றிப்பாதலங்குறித்து
மண்டனீதியன்றென்றுபோக்கறுப்பதுமான. (௨௪)

கொடிமரங்கண்முற்பல்லுயிர்களுநிலைகூட
முடிவிலாமுகில்பொழிதருபுவனமாழ்முந்நீர்ப்
படியடங்கலும்போர்த்தமைநோக்கியப்படிக்கோ
ரொடிவில்வான்பெயர்புவனமென்றுரைத்தனருரவோர். (௨௫)

## குறிஞ்சி.

நலம்விராவியபொன்னிசூழ்சோழநன்னாட்டுப்
பலம்விராவியமழைவளம்யாவரோபகர்வார்
குலம்விராவியவைந்திணைவளத்துளுங்குறித்த
புலம்விராவியகுறிஞ்சியின்வளமுதற்புகல்வாம். (௨௬)

ஈன்றதந்தைவாழிருக்கையினினமெனல்குறித்தோ
சான்றவன்னையைத்தந்ததன்குலமெனநேர்ந்தோ
வான்றகாதலியுயிர்த்தவரிடமெனலறிந்தோ
தோன்றமந்திரங்கொண்டுறும்வேள்வரைதோறும். (௨௭)

கோலவள்ளியாரொடுகுகனமர்தருகுணத்தா
னீலமாமயிலாவயினமருவநீங்கா
சாலமற்றவைத்தழைவிரித்தாடுமாறுங்கு
மேலமைந்தவிண்வேந்தனூர்கருமுகில்விரவும். (௨௮)

எங்கள்சாதியிலொன்றுமுன்வளர்த்தினிதெடுத்த
திங்கள்வாணுதற்றெய்வதப்பிடிபுணர்செல்வன்
றுங்கமாரிடத்தகன்றிடோமென்றுசூழ்ந்தாங்குப்
பொங்கமும்மதம்பொழிபுவாப்பலவவட்பொலிவ. (௨௯)

மறையினைத்தழுந்தொடொறான்மருகனாய்மருவு
முறைதெரிந்துபசரித்தல்போன்முழுவலிவேட
ரிறைகொள்சந்தனில்விளைபெழும்படியெரியிடுவார்
றிறையுறக்கொளநெடுங்குரற்செந்தினைவிளைப்பார். (௩௦)

அறவருகியருமாவேட்காட்டவுமினிய
நறவமேனவினிடியொடுகூட்டுபுநயந்து
குறவரூட்டவுங்குறித்துநாடோறுமுய்த்திட்டும்
புறவமுற்பலவிடமெலாம்போய்ப்புகூஉவருமீ. (௩௧)

ஒருமடங்கலுமொருமதமலையுமுன்னுடன்று
பொருதழிந்தனவழிபடிற்பொலிவுளதென்றே
யிருவிலம்புகழ்குறிஞ்சிவேலிறைவன்மந்திரத்தை
மருவுநன்பொடுசூழ்வமடங்கலுங்களிறும், (௩௨)

ஊடுமாதர்பாலாங்குறைநன்னுவார்விழைவைச்
சாடுமண்ணல்பாற்சூழ்தல்லாற்பிறதாழார்
நீடுவேங்கையோடமர்புரிந்திறந்திருணிறத்திற்
கூடுபல்வடுவன்றியோர்வடுவிலார்குறவர். (௩௩)

ஊருமவான்மதிகாந்தளைப்பார்த்தொன்றுன்னிப்
பெருமாவொருசாரொளிபிறங்குசெம்மணியைச்
சாருந்தீயெனவுனியமோடுமொருசார்மெய்
தேருந்தன்மையாராவிடிற்செறிவனபலவே. (௩௪)

நீலமாமணித்துறுகல்வீழ்ப்படிநாவிலைவு
கோலமாமதிமேலுறாநெடுவிராக்குலவிச்
சாலமேலுயர்சோதியந்தருவிற்றலிருவர்
மாலவானுரீழுச்செவிபாவின்றதுமாணும். (௩௫)

சுனையிரும்பிணுவிறவுளர்தொடுவதுகவலை
புனையிலாதவர்வினைத்தலும்போக்கரும் * கவலை
வனையின்மற்றவர்படுதலும் * மாதர்க்கவலை
கனையிலாவவர்க்கென்றுமில்லாதவுங்கவலை. (௩௬)

குன்றவாணர்தங்குறிச்சிசூழ்வேலியுஞ்சென்னி
யொன்றவைத்திடும்ணையுமற்றவர்தமொள்ளிழையார்
நன்றவாவுகையுலக்கையுநகுதலைச்சிப்பு
மன்றநாடொறுமாவனையானைவெண்மருப்பே. (௩௭)

பொங்குசெம்மணிவிலங்கலுமரகதப்பொருப்புந்
துங்குகற்குடிச்சைலமுமுலகெலாந்தழைய
வெங்குறம்வாள்விடுமுத்தலையிரும்பெயர்க்கிரியு
நங்குநீறொடும்போங்கலுநயந்ததுகுறிஞ்சி. (௩௮)

---

* கவலை, தினை. * மாதர்க்கவலை, பெண்களது கண்ணுமி யவலை.

அரவுபூண்டநம்பிரானமர்சுந்தரப்பொருப்புங்
குரவுபூண்டொருகுமரவேள்பொலிதருகுன்றும்
பரவுமற்றவுந்தன்னகம்பொலிதரப்படைத்த
வுரவுசேர்பெருங்குறிஞ்சியினருந்தவமொன்றே. (௩௯)

முல்லை.

விண்டுவாதியர்தொழப்பொலிவெற்றிவேலிறையே
மண்டுதற்கிறையாகுபுவாழுமொண்குறிஞ்சி
யண்டுபல்வளத்தெவனுரைத்தனமினியறைவாம்
வண்டுகிண்டியன்முல்லைசூழ்நிலப்பெருவளமே. (௪0)

வேறு.

பாயபலபெரும்புவனப்பகுதிபொதுக்கடிந்தோம்பு
மாயன்மதித்திடுசிறப்புட்சிறப்பாகவனமோம்பிற்
றாயதிரைப்பாற்கடலோவைகுந்தத்தொல்பதமோ
வாயவனமிவைக்கதிகமாகுமெனில்வரும்பழியென். (௪௧)

விரைமலர்செற்றியதருக்கண்மிகச்செறியும்பெருவனத்தைத்
திரையெறிபாற்கடலென்றுசெப்புவதற்கையமில்லை
வரைவில்பசுக்கன்றூட்டிமடித்தலநின்றிழித்திடுபால்
புரையில்பெருக்கெடுத்தோங்கப்போற்றிமால்வசித்தலினால். (௪௨)

அண்டர்குழாம்பலருழவாங்காங்குமலர்காயாக்
கொண்டபெருஞ்சாரூபத்தவரமர்கோலந்தெரிக்க
வண்டடையுந்தண்டுழாய்மாயனினிதமர்தலினாற்
கண்டவனம்வைகுந்தமெனக்கரைதற்கையமெவன். (௪௩)

மழைமறுத்தகாலத்துங்காயாவாய்மல்குதலாற்
றழைமலர்செய்காயாவென்பெயர்பெற்றுத்ததையவற்றை
விழைதருபைந்துழாய்சூழ்வமேயமாறம்பாற்கொள்
குழையும்விழைவுணர்ந்தவைகள்குழாங்கொடுசூழ்ந்தமைமானும். (௪௪)

கொடியிடையாய்ச்சியர்திரட்டிக்கொண்டசுவைநவநீத
மொடிவறுதாழியினழல்வைத்துருக்குமணங்கவர்வதற்கும்
படியிலவர்முறிமேனிபரப்புமணங்கவர்வதற்கு
நெடியவன்பன்னூசிபடைநீர்மையெனக்குமிழ்மலரும். (௪௫)

திரையெறிபாற்கடனடுவட்டிருத்துயில்கொண்மணிமார்பன்
புரையில்வனத்தாய்ச்சியரிற்றொறும்புகுந்துபால்கவர்ந்து
விரைதரமத்தடியுண்டுங்கட்டுண்டும்விழைந்தமர்வா
னுரைசெயவர்கையளையவுறுசுவையாதலையுணர்ந்தே. (௪௬)

அழன்மிசையுற்றுறுபாறனளவுசுருங்கியுங்கரிய
குழலிடைமின்னாரின்சொற்கொவ்வாமைகுறித்தன்றே
நிழலுருவந்திரிந்தனையார்நிரைவளைக்கைமத்துடைக்கச்
சுழலடைந்தும் * அலர்கலந்துந்தோற்றமுறக்கதறிடுதல். (௪௭)

தொறுவியர்தங்குவட்டுமுலைத்துணைக்கொவ்வாமையினன்றே
வுறுசுவைகொள்பாற்குடங்களுடம்புமுழுவதுங்கறுக்கு
மறுவறுகற்புடையவர்தம்மருங்குலொவ்வாமையினன்றே
துறுதளவக்கொடியனைத்துந்தொலையாதவலர்படுமே. (௪௮)

---

* அலர் - நீர்,

திருமகளாகியவுமையைச்சேர்ந்தவிணைமென்னுழையும்
பொருவிலவளொடும்பிறந்தான்புடையமருமுயற்கினமென்
றொருவில்பலமுயற்குலமுமுரிமைகடைப்பிடித்தொழியா
வருமணிமார்புடைமாயோன்வீற்றிருக்குமாவயினே. (௪௯)

திங்களுதற்றிருமகள்சேர்செல்வனினிதோம்பிடுங்கா
டங்கண்மலர்க்கடுக்கைதழைந்தமர்தலினலனுகுறலாற்
றொங்களவின்மலர்செறியுங்கூவிளங்கள்பொருந்துதலா
லெங்கள்பிரான்செஞ்சடைக்காடென்றுரைத்தற்கையமிலை. (௫௦)

வெள்ளியகோத்திரவப்போர்மேனுயர்ந்துதோன்றுதலால்
வள்ளியநீண்மணிவண்ணமால்காக்கும்புறவவள
மொள்ளியமால்வரைகாணவொருங்கடைந்துநிற்றல்பொருஉந்
தெள்ளியபல்பயற்றேருங்கல்சிறுகுன்றச்செறிவொக்கும். (௫௧)

நீலமணிகண்டனமர்நெடுங்களமுதிரம்புதவச்
சீலமருவியமேலைத்திருக்காட்டுப்பள்ளியுமெந்
காலமுநன்குறுங்கங்கைகண்டசோழீச்சரமுஞ்
சாலவனத்துறைந்தவெனிற்றவஞ்சிறிதோபெரிதன்றே. (௫௨)

மன்னன்முதல்வானரெலாம்வந்துதொழவரங்கொடுத்து
முன்னவனெக்காலுமமர் * முற்கபுரமுதலாகப்
பன்னரும்பஃறலந்தன்பாற்பரம்பவுளதெனத்தெரிந்தா
லென்னருமுல்லையின்பெருமையெடுத்துரைக்கவல்லுநரோ. (௫௩)

அம்மையார்நீழலில்யாமமர்வோமென்றருள்செய்த
செம்மையார்வீற்றிருக்குந்திருத்தஞ்சைமுதலாக
வெம்மையாரருளுய்க்குமிறைவர்தலம்பலவெனிவ்
வெம்மையார்பெருவனத்தைவிண்ணுலகுநிகர்க்குமோ. (௫௪)

## மருதம்.

குழக்கன்றுபின்றொடரக்குடஞ்சுட்டுப்பலபயில
மழக்கன்றுகுணில்கொண்டமால்காக்கும்வனம்புகழ்வா
னெழக்கன்றுநசையாற்சற்றியம்பினுமருதவளஞ்
சழக்கன்றுசிறிதுரைப்பாம்பெரிதுரைக்கத்தகாமையினால். (௫௫)

## வேறு.

பன்னரும்பெருமைவாய்ந்துபடர்தருவைந்தனிழன்
மின்னகுதிருமுன்னெல்லாம்பணிதலைமேவிநிற்ப
நன்னலவரம்பைமாதர்நடங்கண்டுவானங்காக்கு
மன்னவன்காக்குமேன்மைவாய்ந்ததுமருதவேலி. (௫௬)

வரைதரவருதலானுமாமலர்தாங்கலானும்
புரையில்பல்பேதமாகிப்பலபெயர்பொருந்தலானுந்
துரையகமோம்பலானுந்தண்ணளிநீரினானுங்
கரையறப்பெருகும்பொன்னிகடுக்குமெம்பிராட்டியாரை. (௫௭)

மலைபடுவயிரங்கொண்டுவருதலின்வானவேந்த
னிலைமலைமலர்மேலாகவியைதலினெண்கணாளன்
றலைவளைசமத்தலான்மால்கடுக்கைசார்ந்தணைதலாலே
கலைமறைபுகழுமெம்மான்கடுக்குநீரருதபொன்னி. (௫௮)

---

* முற்கபுரம் - பயறணியீசம், அது, உடையார்பாளையமென வழங்குகின்றது.

மணிமயிற்றழைமால்யானைமருப்பகிலாறுஞ்சந்தாதித்
துணியொளிர்சுவணநெய்பாறுதைமலர்கரும்புகந்தி
யணிகெழுசாலிபல்பூவலங்குளித்திலந்துப்பாதிக்
கணிதமிழுறலாற்பொன்னிகலந்தபண்டாரம்போலும். (௫௧)

இருகரைமுறியக்குத்தியெங்கணும்வெள்ளமாகிப்
பெருகிமுன்னெழுந்தகங்கைப்பெருக்குமோர்திவலையென்ன
வருகொருவருஞ்சாராமலலையெறிந்தகடுகீண்டு
கருகுபைங்கடல்கலக்குங்காமருதெய்வப்பொன்னி. (௬௦)

உடைகரையடைத்துமள்ளரொருவழிச்செலுத்தலாலே
யடைமனுத்தகைக்கப்பட்டவரவெனவடங்கிச்சென்று
மிடைதருபொறிவாய்தோறும்விரைந்துபோய்ப்புகுமனம்போற்
புடையமர்மதகுதோறும்போய்ப்புகுந்ததுநீர்வெள்ளம். (௬௧)

கால்வழியோடியெல்லாக்கழனியும்புகுந்துமுன்னாட்
பால்படுவேனில்செய்தபற்பலகமருமொன்றச்
சால்புயர்தன்பாலாயபிளப்பெனச்சடுதிசெய்து
கோல்வலிமன்னரார்ப்பக்குறையறுத்ததுநன்னீத்தம். (௬௨)

சிவவியாபகமேயென்னச்செய்யெலாந்தகவிற்புக்க
உவமையில்வெள்ளநோக்கியுவகைமேற்கொண்டமள்ளர்
கவலரும்பழையர்பாற்போய்க்கடைவழிதரக்கண்மாந்தித்
தவலருமுழன்மேற்கொண்டுசார்ந்தனர்பழனமெங்கும். (௬௩)

பெருவலித்துணைக்கடாவின்பியலுறநுகங்கிடத்திப்
பொருவருமதற்குநாப்பட்பொருந்திடவேர்க்கால்சேர்த்தி
மருவுறவிடக்கைமேழிபிடித்துமற்றொருகைமேவ
வொருகுழுமுட்கோல்பற்றியுழவராலுரப்பிமள்ளர். (௬௪)

குடதிசைநின்றுமள்ளர்குணதிசைச்செல்லவுய்த்தும்
வடதிசைநின்றுமற்றைத்தென்றிசைமருவவுய்த்து
மிடர்செய்புல்லாதிமாயவிரும்படைச்சானெருங்கத்
தொடர்பலவிளாக்கள்கோலியுழுதனர்தொள்ளிசெய்தார். (௬௫)

செறிபலவுயிர்காப்பாளர்சிதைவுசற்றடைவராயி
னறிதருபயன்கொள்வார்மற்றதுதவிர்த்துயர்த்துவார்கள்
செறிபலபயிர்காத்தோம்பும்வரப்புறுசிதைவுநோக்கி
யறிதருமுழவர்தாங்கங்கரிந்துயர்த்தினர்மேன்மேலும். (௬௬)

உழுதொழில்புரிந்தகாலையழுந்தலோடேழ்த்தறந்தா
டழுவியதுணர்ந்துமாற்றித்தனிபிறுமாப்பேய்வார்போல்
வழுவறுபரம்புபூட்டிமற்றதன்மேற்கொண்டூர்ந்து
கொழுநிலமாடியென்னச்சமஞ்செய்தார்குலவுமள்ளர். (௬௭)

மருதநன்னிலத்துவேந்தைவயல்வளம்பொலிகவென்று
கருதுபுகைகள்கூப்பிக்காமருமணங்கூர்செந்நெற்
குருமுளைவாரிவித்திக்கொண்டநீர்மறுநாட்போக்கிப்
பருவலிமள்ளரோம்பமுளைத்தனபழுதொன்றின்றி. (௬௮)

உறுமழப்பரியதின்றுபாலூட்டியோம்புந்தாய்போற்
குறுமுளையளவதின்றுதகுதியிற்குளிர்நீர்பாய்த்திச்
செறுவலிமள்ளரோம்பச்சிமருமகள்வெற்பீன்ற
நறுநுதனுருவுற்றென்னவிளைவொரீஇப்பசந்தனன்று. (௬௯)

பல்லுயிரடையமாயைப்பாலமைபோகமெல்லாம்
புல்லுறவளந்துநல்கும்புண்ணியப்பெருமான்போல
நல்லியற்கழனிமேவநாற்றங்காணுறனைத்து
மொல்வகைப்பறித்துநட்டாரொன்றுழியாமன்மள்ளர். (௭௦)

ஈன்றவள்கிரகமின்றும்விருத்தியாங்கிரகமெய்துஞ்
சான்றவொண்ணுதலாராங்குத்தாழ்ந்தனவொழுதல்போல
வான்றபல்வயலுணட்டநாறெலாமமையத்தாழ்ந்து
தோன்றமேலெழுந்ததோம்புந்தொழிலினொழுங்குமுள்ள. (௭௧)

புலைமிடிபிணிமுன்றுன்கல்வியைப்பொருந்திற்றென்ன
வலைதருகாமமாதியருந்தவத்தினைச்சூழ்ந்தென்ன
மலைமலமாயைகன்மம்வளருணர்ச்சியைச்சார்ந்தென்னத்
தொலைவில்பல்களைகள்வந்துசூழ்ந்தனபயிரைமாதோ. (௭௨)

உயிர்மலமுழுதுமோப்பக்காலமோர்ந்துறுபெம்மானிற்
பயிரிடர்முழுதுந்தீர்ப்பான்பருவந்தேர்ந்தடைந்தவாட்க
ணயிர்படுமதுரத்தீஞ்சொலுழத்தியரடங்கக்கூடித்
தயிருடைமத்தேயென்னக்களைபலசாடலுற்றார். (௭௩)

முண்டகமனைத்துங்கொய்வார்கொய்தவைமுருங்குமாறு
கொண்டபங்கயப்பேர்தேர்ந்துகுளிர்ந்தசேற்றிடுதல்செய்யார்
கண்டபல்குலையுஞ்சேர்ப்பார்கதிருங்கண்ணோட்டமின்றித்
தண்டவிலுணவாம்பைங்கூழ்க்கூறுதலுணர்ந்துசாடும். (௭௪)

அடிகரமுலைக்குமாறுவலரும்படங்கக்கொண்ட
முடிவருமம்புயத்தைமுருக்கெனக்கண்கள்காட்டத்
தடிதருமவர்கைகாட்டுந்தாளைவன்பகையாமென்று
கடிதருங்குவளையெல்லாங்காமருகழனிமாட்டு. (௭௫)

பரம்பரன்முடிமேலேறும்பாங்குடைக்கமலமெல்லா
நிரம்புநீரோடையாவிநீத்துநீர்சிறிதேதங்கும்
வரம்பமைசெய்யுண்மொய்த்தவண்ணத்தாலுழத்திமாதர்
கரம்பறித்தெறிக்கவன்றூர்காற்றுவைப்புண்டவெங்கும். (௭௬)

இடவியவாவியோடையெனப்படும்புக்கினீத்துத்
தடநெடுஞ்சாலிமேயசெறுவெனுந்துச்சில்சார்ந்த
மடமையாவிருகோணட்டுமற்றிருகாலப்பூவும்
படரடைந்தொழிந்தயார்க்குமொறுக்கிடம்பண்பதன்றே. (௭௭)

பிடிநடையுழத்திமார்கள்பிறங்குநன்னிலத்துவேந்தற்
கொடிதலில்செல்வமெல்லாமொழியமுன்செய்ததிந்த
கடிமலவொன்றேயென்றுகமலங்களனைத்துங்கொன்றார்
படியமற்றதுசார்பூவும்பாற்றினூர்விடுவார்கொல்லோ. (௭௮)

விளைநலத்துழத்திமாதர்விரிசெழுங்கமலப்போதுங்
களைகெழுநுவளைப்போதுங்கைரவப்போதுமற்றை
வளையியல்கொடியுமஞ்சைவலங்களுநனிமுயன்று
தளைவிடப்புரிந்தார்நல்லாரொனும்பெயரவர்க்கேசாலும். (எக)

நிலம்வெளிவழிச்செலுத்திநெடும்புரஞ்செற்றபெம்மான்
பலவகைதடிந்துசின்னம்பண்புறுமெய்ப்பூண்டாங்குச்
சிலமலர்குழலில்வேய்ந்தார்சிலமலர்கையிற்கொண்டார்
சலமலிபண்ணைநீங்கித்தாமமரிருக்கைபுக்கார். (அ0)

களையொருங்கறுதலோடுகருநிறங்கொடுசெஞ்சாலி
விளைபயிர்காமமாதிமேவுருத்தவத்திரேனுங்கி
வளைமதிமுடியான்பாதமலரடைந்தவர்கைத்தானத்
தளையயன்கிளைத்தல்போலொன்றனந்தமாய்க்கிளைத்தபண்ணை (அக)

மனக்கினிதாயபூக்கண்மடிதரற்கேதுவாஞ்சொ
லினக்குமேலெழநீர்ப்பாமென்றெண்ணிவெங்கலியைநாளுஞ்
சினக்குமற்றவைசூற்கொண்டுவெளிவிடறெரிந்துமேன்மேற்
கனக்குமாசெய்ததிந்துகதிர்கவிழ்த்ததுநீர்தெவ்வி. (அஉ)

பதடியொன்றேனுமின்றிப்பழுத்தசெஞ்சாலிநோக்கி
மதவலிமள்ளர்யாரும்வேதினமங்கைவாங்கி
முதலரிந்தவணிவீழ்த்திமுதுசுமையாகயாத்துச்
சுதமில்வண்களத்துத்தத்தந்தலைமிசைசுமந்துசேர்ப்பார். (அங)

போற்றுசெஞ்சாலிபல்லபொன்மலையெனப்போர்செய்துந்
தோற்றுவெண்சாலிவெள்ளிக்கிரியெனத்தொகுபோர்செய்து
மாற்றுபல்குழியுஞ்செய்வாரடுகடாபலபிணைத்து
வீற்றுவீற்றுகவப்போர்தள்ளுபுமிதிக்கவிட்டார். (அச)

உழுதவந்நாளிலிந்நாளுவகைசெய்நன்றென்று
முழுவலியொருத்தலெல்லாமுதுகளஞ்சூழும்போது
கொழுவுவைவாயிற்கவ்விக்குதட்டுபுநனிமுயன்று
தழுவியபலாலநின்றும்பிரித்தனசாலிமுற்றும். (அரு)

சொற்றவையுதறிப்போக்கித்தூற்றிநெற்குவித்தளந்து
கற்றவன்மறையோர்முன்னுக்களச்செலவொருங்குசெய்து
கொற்றவனுறிலொன்றுகொளக்கொடுத்தெச்சம்வாரி
முற்றவுமனைக்கணுய்ப்பார்முழக்கம்விண்செவிடுசெய்யும். (அசா)

அரிசனஞ்செறியுமிஞ்சிவாதியவகழ்கின்றாரும்
விரிதலைக்கரும்புவெட்டியுடைத்தலைமேற்கொள்வாரு
மெரிதரப்பாகுசெய்துகட்டிகளியைக்கின்றாரும்
பொரியளைத்தேமாவாதிப்பூங்கனிகொள்கின்றாரும். (அஎ)

கந்திகளீன்றதாற்றுப்பழம்பலகவர்கின்றாரும்
புந்திசெய்நல்லாரோடுபுதுப்புனலாடுவாரு
முந்தியகிழத்திமார்தழுடலையுணர்த்துவாரு
முந்தியநகரமெங்குமொய்த்துளாரிடையறாமே. (அஅ)

மன்னியவாரூர்நல்லம்வாஞ்சியமிழலையம்பர்
பன்னியபுகழ்க்கோமுத்திபகரிடைமருதுநாரூ
மின்னியகுடந்தையையாறுயர்வளமிகுமாயூரந்
துன்னியபிறவுங்கொண்டமருதம்போற்றாயதுண்டோ. (௮௧)

## நெய்தல்.

வாய்ந்தவிண்ணுலகங்காக்கும்வள்ளலாயிரங்கண்கொண்ட
தேய்ந்தபல்வளமுநோக்கற்கெனப்பொலிமருதவைப்பி
னாய்ந்தசில்வளமுஞ்சொற்றுமல்லம்யாமலர்ப்பூம்புன்னை
தோய்ந்தபைங்கானநெய்தற்றொகுவளஞ்சிறிதுசொல்வாம். (௯௦)

வலிகெழுசுறவுகைக்கும்வருணனாற்புரக்கப்பட்ட
பொலிவுடையதுநீர்நெய்யிற்பொலியழற்குண்டமாகி
மெலிவில்பல்பரதவர்க்கூண்விளைநிலமாகியோவாக்
கலியமைகடல்விராயகருங்கழிநெய்தல்வைப்பு. (௯௧)

மணிகளும்பொன்னுமாயமாண்பெருஞ்செல்வமேவிக்
கணிதமில்பெருமைவாய்ந்தகடற்குவர்புலாலென்றேனுந்
தணிவரும்பழியிரண்டுந்தபுத்தலிற்புகழாமென்றே
யணிகொள்புன்னாகமாதியலர்ந்துதேனாற்றம்வீசும். (௯௨)

ஒருதினமுதல்வன்பாற்பொய்யொன்றுரைதோடநீங்க
வருதினமெல்லாங்கைதைவருதிரைமூழ்காநிற்குங்
கருதிநுகண்டுந்தீரார்களைவர்பொய்யென்றஞாலத்
துருவினையொன்னிற்றீர்க்குமுபாயமென்னுணர்ந்தார்கொல்லோ. (௯௩)

கூடியபவளக்காட்டிற்கூன்வளையூர்ந்துசேற
லாடியபெருமான்வேணியணிபிறைதவழ்தலேய்க்கு
நீடியவல்லியொன்றுநிற்கமீன்சுற்றுந்துள்ளல்
வாடியமருங்குற்கூத்திவாளாட்டுவினோதந்தேற்றும். (௯௪)

வடுவகிரனையவுண்கண்வலைச்சியர்மீன்பிளந்த
றொடுகடலுப்புமாட்டலுணக்கல்சூழ்தருபுள்ளோப்பல்
விடுதல்செய்திடலானுண்டாமேனியிற்புலவுநாற்றங்
கெடுவகையனையைம்பாற்கேதகைவாசம்வீசும். (௯௫)

கலத்துநின்றிழியும்வேழங்கருநிறங்கெழுபுன்னாக
நலத்தறல்குடித்தமேகநாடிவேறறியவேண்டி
னிலத்தினையநடையாலென்றுநிலைகொடுநிற்றலான்மேல்
வலத்துறவெழலாலன்றிமற்றொன்றாலறியலாகா. (௯௬)

உறுதிமில்விடுக்குமோதையுமணருப்பளக்குமோதை
பெறுவலைவீசுமோதைபெற்றமீன்கவருமோதை
மறுகுநீர்குளிக்குமோதைவளைபலபோழுமோதை
யிறுபன்மீனீர்க்குமோதையெழுகடலடைக்குமோதை. (௯௭)

இழிபொருளுயர்வுசார்ந்தாலுயர்பொருளிழிவுசார்ந்தாற்
கெழியதன்குணமாமென்றேகிளத்தன்மெய்புலவுசார்ந்த
கழிநறுநீலத்தீயபுலானாறுங்கழிபுலான்மீன்
கொழிநறுநீலஞ்சார்ந்துமலர்நாறுங்குணமீக்கொண்டே. (௯௮)

போதலிலாகூழுள்ளார்பொருண்முயன்றீட்டுங்காலை
கோதலிலாதுமந்தப்பொருளுறனுவலக்கேட்டோங்
காதலினாவாயுந்திக்கணக்கின்மீன்குவிக்கும்போதே
யாதலுண்டாகத்துள்ளியாவயின்விழுவபன்மீன். (௯௯)

இடைநின்றுமெழுந்தமாலிற்கிளர்கரும்புன்னைநிற்குந்
தடையின்றிப்பவளவல்லிதழுவன்மாத்தழுவனேரு
முடையபொன்றழுவவம்மானகையொருங்குற்றாலென்ன
மிடைதருகுழைமுகத்துவெள்ளியவரும்புதோன்றும். (௧௦௦)

வலைமடமகளிர்காயுமயிலைமுற்சாரவொட்டா
தலைபுரிகுவரானுமாவயினகலாபுட்டங்
கொலைபுரிமதனைவாயகொழுமலருண்டுமன்னர்
தலையமைபோருண்டென்னுந்தன்மையுட்டெரிந்ததொத்தே. (௧௦௧)

முடிவலையெடுத்துவீசிமொய்த்தமீன்பலவுங்கொல்லுங்
குடிகளையிழிந்தவென்றுகூறுதற்கஞ்சுகின்றா
முடிவலையெடுத்துவீசிமொய்த்தமீன்பலவுங்கொன்றே
யடியரிலொருவராயவதிபத்தர்பெருமையெண்ணி. (௧௦௨)

மறையெலாமருச்சித்தேத்தவள்ளலாரமரும்வைப்பு
மறையுமோர்தவத்தினானைக்காயத்தாரோகணித்தா
முறையருள்செய்தநாளுமுதல்வனாரமரும்வைப்பு
நிறைதருதவத்ததிந்தநெய்தலோமற்றுமொன்றோ. (௧௦௩)

மயற்பகையனைத்தும்வென்றுமாதவத்துயர்ந்தோனாய
வியற்பகையென்னும்வள்ளலெம்பெருமானைக்கண்டு
செயற்படுமொருசாய்க்காடுபல்லவனீசஞ்சேர்ந்த
நயற்படுநிலமோநெய்தலெனிலதன்றவஞ்சற்றாமோ. (௧௦௪)

## பாலை.

வளமலிமுல்லைவாயின்மயேந்திரப்பள்ளிமுன்றா
வளவறுதலங்கடன்னுளடக்கிமற்றளவின்மேன்மை
யுளதெனவெவருங்கூறவுறுநெய்தல்வளமென்சொற்றாம்
பளகறுபுலமைவாய்ந்தீர்பாலையின்வளமுஞ்சொல்வாம். (௧௦௫)

## வேறு.

சொற்றநானிலவெல்லையுட்சண்டலாயொதுங்கப்
பெற்றதெந்நிலமந்நிலம்பெருமுதுவேனி
லுற்றநண்பகற்பாலையென்றொருபெயர்பூணுங்
கொற்றமேவுறக்காத்தினிதோம்புவாள்கொற்றி. (௧௦௬)

நீரிலாநிலமாயினும்வேம்புகனிரம்பிச்
சாரிலார்தருநிழறருமீந்துகடைந்து
பேரிலாப்பசிபோர்தருகனிதருநெல்லி
யோரின்வாய்ப்புனலூறச்செயுமினப்புகழுறவே. (௧௦௭)

எந்நிலத்தருந்தோல்வியையெண்ணுநரல்லர்
நன்னிலத்தமர்ந்தென்பயனெனவதைநண்ணி
யந்நிலத்தமர்கொற்றிதனடிதொழுதந்த
வெந்நிலத்தமர்பூக்கொளினினியெவன்வேண்டும். (௧௦௮

மன்னுபல்பாண்முரம்பினைவரையெனவாங்குத்
துன்னுதிம்பவண்கனிகிவக்குறியெனத்துணிந்து
பன்னுபல்கமுகளாவுவவாரணப்பறம்பின் *
மின்னுசோதியைச்சூழ்கமுகடைவதுவிழைந்தே. (க0கூ)

ஒல்லுமிக்கிலம்பயனிலதாருமென்றுரைப்பார்
புல்லுமற்றநன்னுண்மையைப்புந்தியுட்குறியார்
சொல்லுமெய்ந்நிலந்துள்ளதாலிந்நிலந்துறைந்த
கல்லுநல்லுணவாயுயிரோம்புதல்கருதின். (கக0)

பரவுகொங்கைகளெங்கணுமுருத்தமென்பஞ்சு
விரவுநன்மையானடப்பவாந்நிலமிதியார்
கரவுதீர்தரநோதலுமிலவொளிர்களையு
முரவுசாலவர்சாநிலத்தவொனலொக்கும். (ககக)

திணைமயக்கம்.

செற்றமார்மறந்துவலை * யர்குரம்பைகள்செறியக்
கொற்றமேவியகொற்றிவாழ்கோட்டமுட்கொண்டாங்
குற்றயாவர்க்குங்கூடுமாறருள்சாற்றுதுசீர்
சொற்றனம்மினித்திணைமயக்கமுஞ்சிலசொல்வாம். (ககஉ)

வளையகம்பொலியொருதருத்தேத்துடைவழியும்
புரையிலின்மதுப்பொதுவியர்பாற்கலத்தேற்ப
விளைசெய்கானவான்பான்மதுக்கலம்விழைந்தேற்பா
ருளைசெயுங்கொடிச்சியர்பரிவருந்தவையுன்னி. (ககங)

கானவேறுபுற்றிணைக் * குதர்க்கெழுக்கண்டகமுவித்
தானவான்பகடடிகொடுதாயினைவெட்டு
ஞானநாயகனார்திகண்டொருநமனார்தி
யானதஞ்சிமண்புகமுயன்றிடுதிறனமையும். (ககச)

நல்லநீர்வயலின்றெழுவயலைமாநாலைப்
புல்லென்னீரளாமுவர்ப்புனலின்றெழுபவள
மெல்லவந்துசெய்நல்லநீராயிருவினையா
லொல்லைமென்மையுந்தீழ்மையுமாருமுயிர்போல். (ககரு)

குன்றமேவியகிறவுளர்சிறுமகார்குழுமி
வென்றவெம்புலித்தோலுரிபறித்தனர்வீச
வொன்றநெய்தலங்குழமகார்குழுவொள்ளரும்பு
நன்றவாவுபறித்தெதிர்வீசினர்நகுவார். (ககசா)

கரியகுன்றமர்பசமயிலாலுதல்கண்டு
பிரியமேயகானத்துவான்கோழிபேருவகந்
தெரியவாடுவபற்பலகைகளுந்தெளிந்து
வரியர்போன்றுபுன்கவிகுரும்பயிலுமந்திறம்போல். (ககஎ)

குரவுதாங்கியபாவைக்கான்பால்வளங்கொடுக்கும்
விரவுவாரிமுந்தெறிதரும்பணைகளைமுவீச
முரவுமால்வளைபொன்மணிமுதலியவுதவும்
பரவுபாவையென்றுக்கொடார்பாரிடத்தெவரே. (ககஅ)

---

* குதர்தல் சிதறுதல்.
* உவலை - இட்டை.
* ஆரணப்பறம்பு - வேதாசலம்.

நலமலிந்தவிவ்வளங்கெழுசோழநன்னாட்டு
வலமலிந்தபல்குடிகளுந்தமக்குரிமரபிற்
புலமலிந்தநல்லொழுக்கமன்பமைதரப்பொருந்திப்
பலமலிந்தவான்றிருவொடும்பொலிவபன்னாளும். (௧௧௧)

பொன்னுநேர்தராப்புலவர்பல்லோர்களும்புகழ
மன்னுசீர்வளநாட்டின்வான்சிறப்புறச்சொல்வான்
முன்னுமாசைமற்றொருவிதந்தணிதரமொழிந்தாங்
துன்னுமேன்மைமாயூரத்தின்வளஞ்சிலசொல்வாம். (௧௨0)

திருநாட்டுப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௧௫௫.

# திருநகரப்படலம்.

பாங்குசேர்தவமுடையரோவசித்திடுபெண்பாற்
றாங்குவார்சடைப்பிரானுமையொடுமமர்தகவால்
வீங்குபேரொளியாலழியாதமர்விறலா
லோங்குவான்சிவலோகமேகௌரிமாயூரம். (௧)

சொற்றபல்வகைநூலுந்தன்பானின்றுதோன்றப்
பெற்றமேன்மையாற்பரன் * அகப்பொருளெனப்பெற்று
மற்றவானவர்புறப்பொருளெனக்கொண்டமாண்பா
லுற்றமாமறைபோல்வதுகௌரிமாயூரம். (௨)

கரியமான்மகன்கண்டபன்னகரத்துளொன்றே
லரியவாமலர்த்தூயவன்வழிபடற்காமோ
பிரியமேவவெம்பிரான்புரிநகரெனல்பெற்
றுரியநான்மறைமுழக்கறாக்கௌரிமாயூரம். (௩)

மருவுமெண்டிசைப்பாலர்கண்மலரவன்மாயன்
பொருவுதீர்தருமொவ்வொருபதமுறப்போற்றத்
திருவொடுந்தருவள்ளலார்செறிதிருநகரோ
டுருவமற்றுமொன்றொப்பதோகௌரிமாயூரம். (௪)

முத்தவாணகைச்செய்யவாயரம்பையர்மொய்த்த
சுத்தமாநகராயதொல்வானகமொன்றும்
* அத்தமாநகரொன்றெடுத்தியாவருமறைதற்
கொத்தவேதுவாமுழுநகர்கௌரிமாயூரம். (௫)

தேனவாங்குழலஞ்சனாயகியொடுதெய்வ
வானநாயகர்வள்ளலார்மருவுமாயூர
மானமோவுபேரொளிகொடுவயங்கலால்வானத்
தானமாநகர் * நிசிநகரெனச்சொல்வர்சான்றோர். (௬)

---

* அகப்பொருள் - அகநகரத்துப்பொருள்.
* அத்தமாநகரம் - பெரியபாதிநகரம் எனவும், பெரியபொன்னகரம் எனவுங்கொள்க.
* நிசிநகர் பொன்னகர் எனவும், இருணகர் எனவுங்கொள்க.

வரைமுன்றாகியநால்வகைநிலவளமதித்தே
புரையிலாநிலஞ்சுரநிலமெனப்புகல்வதுபோ
லுரைசெய்மேன்மைமாயூரநான்கெல்லையுளோர்ந்தே
கரைவர்வானகர்சுரநகரெனப்பலகற்றோர். (எ)

பரித்தபல்வளக்கௌரிமாயூரமிப்பாரோ
யுரித்தவாயுறைவதற்கெனவுறையவும்வருநீ
விரித்தமேலென்பாலமர்வதென்னெனமதிமிளிர்வான்
சிரித்ததாரும்பொன்னகரினைத்தாரகைச்செறிவு. (அ)

விரிதரும்புகழ்க்கௌரிமாயூரத்துவிளங்கும்
பரிகள்குஞ்சரம்பசுநிதிதருமணிபல்ல
தெரியுமிவ்வளனைமைதாரச்சிறியபுன்னகரைப்
பிரியமிக்கதற்கொப்பெனவெவர்சொல்லப்பெட்பார். (கூ)

அளகையென்பதுமிருபொருளுடையதேயாலும்
பளகறப்பருத்தீதராமையிலுவர்ப்பரவை
தளர்விலாநிதிபடைத்தமாயூரஞ்சார்ந்தோர்க்கு
வளமிலாவுறக்கொடுத்தலால்வயங்குபாற்புணரி. (க0)

வேறு.

அன்பினையருள்சூழ்ந்தென்னவருளினையமலச்சோதி
வன்புறும்படிசூழ்ந்தென்னமயிலாடுதுறையென்றோது
மின்புகழ்மாயூரத்தையெற்றைக்குஞ்சூழாநிற்கும்
பொன்புலமெனக்கொண்டார்க்குநிழல்செயும்பொங்கர்ச்சோலை. (கக)

தெருள்வளாருளைச்சூழ்ந்தசிவப்பிரகாசத்தாடே
பொருள்வளரிடையறாதவானந்தம்பொலியுமாபோ
லருள்வளர்மயிலைச்சூழ்ந்தவந்தளிர்ப்பொழிலினூடே
கருள்வளர்கலிதீர்செஞ்சொற்காமருகழனிமல்கும். (கஉ)

வயலகம்பொலியாநின்றவான்கழைக்கருப்பங்காட்டோ
டயலமர்தருளிற்றேமாங்கனிவருமனாவுந்தன்மை
யியல்வளர்காழிஞானசம்பந்தனிவேற்றோடு
மயறவிர்ஞானவாய்மைவாசீசர்கலந்ததொக்கும். (கங)

கரியபுன்றுகதிற்றளிற்றின்றவடுக்கக்காட்டுங்
தெரியுறக்கிளைக்கோடோன்றுதிருக்கையிற்சூலங்காட்டும்
புரிதாவருதுவெள்ளைமுறுமதிபொருத்தமேவ
லரியமற்றெருருவைமேயவாயன்றலோமன்றைகாட்டும். (கச)

மதுவுகக்குழிக்கதேத்துவாறைமாங்கனிகள்சோப்
புதுமணங்கொழிக்குமற்றைக்கனிகளும்பொருத்துங்காட்சி
மூதபுகழ்ச்சிவத்தானத்துக்கவுளியமுதல்வாசீசர்
கதுமெனப்புகுதச்சூழுமடியரோகமிக்குமன்றே. (கரு)

கரையமர்கதலிமீன்றகாமர்பாளைமேல்வீழ்ந்த
வரையறைதளிர்செஞ்சாலிக்கதிர்பலவருமித்தோற்றம்
புரைசெய்மேற்போர்வைதீத்துப்போற்றுதன்மெலமாய்ச்சோறு
புரைகெழுப்பின்புமேவுமுனிவருற்றனையதல்போலும். (கசு)

மயிலியலென்றுகூறும்வழக்கறமயிலையாய
குயின்மொழியுமையாள்பூசைகுயிற்றியதானமென்று
வெயினிலவாகுஞ்சோலைவிரிமலர்க்கொம்பர்தோறும்
பயினடமியற்றுகிற்கும்பசுந்தழைத்தோகைமஞ்ஞை. (கஎ)

சோலைசூழோடைதோறுந்தொடுபுனற்பட்டந்தோறு
மாலைவாய்மலர்செவ்வாம்பன்மலர்பலசெறிந்துதோன்ற
லாலைசூழ்திருவாரூரினமிநந்தியடிகணீர்மேற்
பாலையார்பற்பதீபம்பரப்பியகாட்சிமானும். (கஅ)

நால்வகைமலரும்பூத்தநந்தனவனங்கடோறு
மோல்வகையொழியாவண்டொருங்குறவலைக்குங்காட்சி
நூல்வகைமுழங்குந்தேவர்றூனந்திர்ந்தமர்தேமென்று
மால்வகையவுணர்பல்லோர்வந்துவந்தடைதல்போலும். (ககூ)

## புறநகர்.

கலைபுகல்வளஞ்சான்மேன்மைக்கௌரிமாயூரச்சீர்த்தி
யலைவரும்பொறுமைதன்னிலறைந்தனஞ்சில்லவப்பா
னிலைபுறமிடையுள்ளென்றுநிகழ்த்திடுநகரமூன்று
ளலைவறுபுறமென்றோதுநகர்வளஞ்சிலவுரைப்பாம். (உ0)

உம்பராதியர்பல்லோர்க்குமூறுதிர்வலியேயரம்பந்
தம்பிரானடைந்ததெங்களுறுப்பொன்றன்சார்பாலென்னிற்
பம்புபல்லுறுப்புஞ்சேர்ந்தவெம்வலிபகர்வார்யாரொன்
றிம்பரையுணர்த்தியாங்காங்கியங்குவவெண்ணில்யானை. (உக)

தரைமுதலெட்டுமாயதம்பிரான்மேனிமுற்றும்
புரைதபமறைத்ததொன்றுபோர்த்தியதோலேயென்னிற்
கரைசெயெம்முடம்பின்பாழிகணக்கிடப்படுமோவென்று
வரையறமுழங்கியென்னமுழங்குவமதமால்யானை. (உஉ)

கறையடியென்றுந்தந்தாவளமென்றுங்கரியென்றும்பா
ரறைதருநால்வாயென்றுமவிர்புகர்முகமதென்று
யிறையிலொவ்வோருறுப்பான்மிகுதியும்பெயர்பெற்றேம்யாங்
குறையுளபிறவென்றெள்ளுங்குஞ்சரமனந்தமாங்கண். (உங)

எங்கடந்தலையிற்கோடொன்றில்லைதெய்துப்பெற்ற
திங்களஞ்சடையான்றளிற்றிறனரமடங்கற்சென்னி
பங்கமுற்றொழியத்தாழும்படிகண்டுமரிதெவ்வென்பார்
தங்களொள்ளறிவென்னென்றுநந்தத்தானைகைக்கும்வேழம். (உச)

மருவலர்மருமம்போழுமருப்பினமகுடச்சென்னி
திருகுறுங்கரத்தயாக்கைசிதைதரத்தேய்க்குந்தாள
வெருவருமுகிலுமஞ்சமுழக்கினவென்றிகோட
லொருவருமதமால்யானைவாரிகளுலப்பிலாத. (உரு)

அரிவிறலுருவங்கொண்டவரியெனப்படுமோர்தேவும்
விரிதருமீற்றிலெங்களுருக்கொளல்வேண்டுமென்னிற்
புரியுமெம்முருவச்சீர்த்திபுகலுதற்கடங்காதென்று
தெரிதரமுழங்கல்போலச்சிலைத்தனதிரிவபாய்மா. (உசா)

எங்கணின்றுங்கூடியிமையவர்கூட்டத்தோடு
துங்கவெண்கயிலைமேயசோதியைப்புவிமேலேற்றிப்
பொங்கமுன்னீர்த்தவென்பார்புகழதன்றன்றேசாலு
மங்கதுதெரிவார்யாரொன்றியம்பலினூர்க்கும்வாசி. (௨௭)

மறைமொழியந்தணாளர்வழாதுமுப்பொழுதுஞ்செய்யு
நிறைபெருஞ்சகாயத்தாலேநிகழுமோராழிபூண்ட
பொறையிலாவொருதேரீர்த்துப்போமெழுபரிகளிவ்வூர்க்
குறைவிலாவொன்றேயீர்க்குஞ்சகாயமுங்குறிக்கொள்ளாதே. (௨௮)

ஆயநம்முருவங்கொள்ளுமலங்கலந்துளபமாயோன்
மேயநன்மனையாளென்னுமெய்யுளத்துணர்ந்ததேயோ
பாயபல்புரவியெல்லாம்பார்வடுப்படுமென்றஞ்சித்
தோயவுந்தோயாவாகவடியிடாத்துனைந்துசெல்லும். (௨௯)

செறுநர்தஞ்செம்பொன்மோலிச்சென்னிமேற்குரமழுத்து
மறுகியினமயம்வந்தாலாழியோரேழுந்தாண்டும்
பெறுவதுவென்றியன்றிப்பெற்றறியாதவென்று
மறுவறுவாசியாந்தமந்திரம்பல்லவாங்கண். (௩0)

நுணாகிழித்தேருஞ்செய்யதாளும்விண்ணுலகமென்னும்
வணாகிழித்தேருமம்பொற்சென்னியும்வாய்ந்தபொற்றே
ருணாகிழித்தேருஞ்சீர்த் * தீயுருவன்பூண்கரியவாசி
புணாகிழித்தேரும்வெள்ளைத்துவசநாடிரண்டும்போலும். (௩௧)

தழுவியதனிரியற்குக்குழைந்தவன்பாதஞ்சார
வழுவியவச்சுவாய்ந்தசயந்தனமாருநாணுண்
முழுங்கியாருதினுமச்சுமுறிதராவினையபொற்றே
ரொழுங்கியசமவாசிக்குந்தோற்றதற்குறுவதென்னே. (௩௨)

மறையெலாமெடுத்துக்கூறுமாதேவனேறும்பொற்றே
ரிறையிலோராவுணன்வெளவிக்கரப்பதற்கியைந்ததன்றே
நிறையொளியினையபொற்றேரதுபெருநிலைமையாலே
முறையின்மற்றதனோடொப்புமொழிதரல்குற்றமன்றே. (௩௩)

விரைதராவீர்த்துச்செல்லும்வெம்பரிக்குழாத்தையோதும்
புரைதபுசயந்தனந்தான்றொடர்ந்ததுபோகுங்காட்சி
யுரைமறைக்காட்டினின்றுமும்பர்நாதனைவாகீச
னுரைசெய்தீர்வளஞ்சால்வாய்மூர்சேர்தரத்தொடர்ந்ததேய்க்கும். (௩௪)

தரியலர்கூட்டமேவிற்றனைமிசைக்கிடத்தியேறி
விரிருடர்முனைசெய்த்தோர்பரந்திடமிகத்துவைக்கு
மரிமணிப்பொலந்தேருட்கொண்டலங்குயர்சாலைமேலாற்
றெரிதரவோராழித்தேர்முதலியதிரிவமாதோ. (௩௫)

விழித்தகண்ணிமைத்தல்செய்யார்வேலெதிர்வந்தபோதுங்
கொழித்தபொற்கழற்கால்பின்னர்வைத்திடார்கூற்றுற்றாலு
மழித்தபல்லூறுற்றாலும்பிடித்தவாளங்கைசோரா
ரிழித்தசொல்லடையுங்காலத்துயிர்ப்பொறையெய்தாவீரர். (௩௬)

---

* தீயுருவன், அக்கினி மலையாகிய சிவபெருமான்.

தரியலரம்புமார்புத்தையவாம்வடுக்களன்றி
யுரியபொற்கலங்கள்வேறென்றுவப்புறுர்தெவ்விலாமைப்
பெரியகண்டேதிதின்னப்பித்தரிற்றிரிவார்நேரிற்
சரியவென்றிடலாமென்றுதடம்புயம்வீங்கும்வீரர். (௩எ)

ஒருகையிற்பலகைமற்றையொருகையில்வடிவாடாங்கித்
திருகையுற்றமர்செய்வார்முற்செல்லுவரவர்பின்னிட்டாற்
பொருகைகொண்டமைக்குத்தம்மைப்புலந்துதாமேயிழிப்பார்
முருகையொப்பவரோரைந்துமுகமிலாக்குறையொன்றுண்டே. (௩அ)

இன்னபல்வீரர்வாழுமிருக்கையுமிவருக்கேவன்
மன்னநன்காற்றுவார்தம்வாழ்க்கையும்பரிமால்யானை
யுன்னதவிரதமற்றுமுள்ளவைதமக்குவேண்டு
மின்னகுபலவுமாற்றும்வினைஞர்தமிருப்பும்பல்ல. (௩௯)

## இடைநகர்.

அறநகவொன்றுபன்னூலறிந்தவரொடுத்துப்பேசுந்
திறநகராயதிராச்செல்வஞ்சேர்மாயூரத்தின்
புறநகர்வளத்தென்சொற்றும்பொற்பொடுபொலிவுநாளு
முறநகாரசாய்மன்னுமிடைநகருரைக்கலுற்றும். (௪0)

அளிவளர்கதுப்பினல்லாராடவரொடுங்குலாவு
மொளிவளர்மணிசெய்மாடமோங்கொளிபரப்பலாலே
களிவளர்கருப்புவில்லான்களிற்றிவர்ந்தேகல்செய்யா
னளிவளவொருதேரோறிச்சாளரநுழையுநாளும். (௪௧)

நன்னலங்கனிந்தமேனிநங்கையரிலக்கமாகக்
கன்னலஞ்சிலைபெய்வாளிக்கமலம்வாழ்வதனமுல்லை
பன்னலநறியநீலம்பார்வைகண்டணுகற்கஞ்சு
மின்னலமசோகமாம்பூவிரண்டுமஞ்சாதுமேவும். (௪௨)

மலையினும்பொலியுந்திண்டோண்மைந்தர்யாவரையும்வாங்குஞ்
சிலைநுதன்மடநலார்தந்திருமுகநினைப்புண்டாக்கும்
விலையில்வெண்ணகையேநாளுமிகுகிடைகாட்டுங்கண்ணே
கொலைசெயுமென்னிற்காமன்கொடுங்கணைமிகையாமன்றே. (௪௩)

மேலுயரிந்துகாந்தவெண்ணிலாமுற்றத்திட்ட
காலுயர்பரியங்கத்திற்கண்டுயின்மாதர்மைந்தர்
பாலுயர்மதியந்தோன்றப்பொழிந்தநீர்பரத்தலாலே
சேலுயர்கடலிற்றுஞ்சுந்திருவொடுமாயனொத்தார். (௪௪)

வெள்ளியவிந்துகாந்தவெண்ணிலாமுற்றநாப்ப
ணௌள்ளியவாடலாற்றியணைமிசையுறங்குநல்லார்
வள்ளியமதிகண்டாங்குவண்புனல்பெருகலாலே
துள்ளியகடலிற்பற்பறுகிர்க்கொடிப்படர்ச்சிபோன்றார். (௪௫)

வானுயர்மாடமேலாற்றுகிற்கொடிவயங்கல்கண்ட
மீனுயர்கடல்வைப்போர்வான்றேனுரிவிதமென்னென்பார்
கானுயர்கற்பநாட்டார்கண்டுமண்முளைத்தெழுந்து
தானுயர்தருவின்பாலோர்தளிருறும்பெயர்யாதென்பார். (௪௬)

மேலுயர்செம்பொன்மாடவெண்ணிலாமுற்றஞ்சார்ந்த
பாலுயர்மொழியாரொட்டிக்கற்பகப்பழம்பறிப்பார்
மாலுயர்வானநாட்டுமாதர்சற்றேகுனிந்து
காலுயர்மனைப்பாற்றேமாங்கனிபலபறித்துவப்பார். (சஎ)

புயறவழ்மாடமேலாலரிசனமாதிபூசி
வியனெடுங்கண்ணார்மண்ணிவிடுபுனலணையதேத்துக்
கயலொழுகாற்றுவீழவதின்முழுகமரர்தாம்வே
றியன்மணமதித்தாடீநலார்க்கிடைந்திரங்கிச்சோர்வார். (சஅ)

ஓங்குபொன்மாடமேலாலொள்ளிழைமடவார்கூட்டிப்
பாங்குசெய்மஞ்சளாடல்பயின்றிடவணையமஞ்சள்
வீங்குவாசனைசுலாவமெய்ம்மணங்கமழ்வதோரார்
தேங்குவானரம்பையர்க்குச்செயற்கைவாசனையின்றென்பார். (சகூ)

கொழிசுவைத்தமிழ்நேரஞ்சொற்கோற்றொடிமடநல்லாரும்
பழிதபுமைந்தராரும்பயிலுபரிகையின்மாட்டுக்
கெழியபன்மடவார்போக்கல்செய்யவுங்கிளர்ந்தகுப்பை
கழிதரக்காணூர்பஞ்சதருக்களைக்கனன்றுவைவார். (ருO)

வெள்ளியமுறுவற்செவ்வாய்விளங்கிழைமடநலார்சேர்
வள்ளியபொற்கீழ்மாடமண்ணுவபொன்னிநன்னீ
ரொள்ளியமணிச்சாலேகமுறநதபொன்னெளிர்மேன்மாடந்
தெள்ளியபிறவுமண்ணுந்திருந்துவான்கங்கைநன்னீர். (ருக)

துன்னியசெம்பொன்மாடச்சோபானமார்க்கஞ்செல்லின்
மன்னியசுவர்க்கலோகமருவுதற்கையமில்லை
மின்னியவவ்வாறேகாவிதமெவனெனவிஞ்ஞவி
லுன்னியவஃதிவ்வூர்போற்சிறவாமையுணர்ந்தார்போலும். (ருஉ)

காரும்வாராறலுமஞ்சுங்கதுப்பினர்செல்வமாட
மேருவோடிகலிநின்றவிந்தமொத்துயர்ந்ததேனுஞ்
சாருநாள்கோளியங்கச்சாளரம்விடுத்தலாலே
யோருமோர்முனிகைசெய்வதொன்றுமின்றுயிற்றம்மா. (ருங)

வலிதருமைந்தரெல்லாமதனனேயென்னும்பொற்பார்
பொலிதருபரமன்மேலும்பூப்பலதூவுவார்க
ளொலிதருநுதற்கணேக்காதொழிந்ததென்னெனவிஞ்ஞவின்
மலிதருபூவைப்பூவென்றெண்ணுதல்வாய்ந்துளாரே. (ருச)

பொருவில்வெண்சுதைசெய்மாடம்பொங்குபாற்கடலாமேலா
லொருவருமடநல்லாராங்குதித்தெழுஞ்செய்யாளொப்பார்
வெருவருமைந்தர்வேட்டுமேவியமாயோனொப்பார்
பருவரவில்லாப்பாலர்பசுங்கழைக்குமரனொப்பார். (ருரு)

நறுமலர்கட்டிமைந்தர்நகுமணக்கட்டவிழ்ப்பா
ருறுவகைநோக்கியன்னூரொன்றுநோக்காதுசெய்வா
ரிறுமருங்கலசக்கொங்கையெடுத்தவரொடுப்பொழிப்பார்
மறுவறநடந்தன்னூர்தடையொழித்திடுவர்மாதர். (ருசா)

கண்டத்தினழகைவெளவுங்களவறிந்தொறுத்தன்மானக்
கண்டொத்தமொழியார்கந்திக்கழுத்துறப்பாசம்பூட்டிக்
கண்டத்துகுழைகளாடக்காமர்பொன்னூசலாடக்
கண்டுற்றபுருடர்நெஞ்சுங்கலக்கமுற்றூசலாடும். (௫௭)

வெயில்விடுமணிசெய்மாடமீமிசையங்கலாவை
மயிலெனவஞ்சியன்றேவானகத்திராகுகேதுப்
பயில்கதிர்மதியைநாளும்பற்றல்செய்யாவாம்பற்ற
லயில்விழிமடவாரங்கணமர்தாராக்காலத்தம்மா. (௫௮)

மாதரார்வதனங்கண்டம்வயங்கிருமதிகளாக
வோதமுத்தாரக்கொங்கையுவக்கும்வெள்யானையாக
வோதகமருங்குல்கற்பக்கோடாகநுவலுமைந்தர்
காதலிந்திரன்போல்வார்மெய்க்கண்ணிலாக்குறையொன்றுண்டே. (௫௯)

முரிதிரைப்பரவையல்குன்முயங்குமந்தரம்போற்கொங்கை
வரியரவொருமருங்குல்வயங்குறுதாங்கொன்னு
முரியவோடதிமடுத்திட்டுறுசுவையமுதங்கொண்டு
தெரியவந்நகர்வாழ்மாந்தர்யாவருந்தேவரொத்தார். (௬௰)

பெருகொளிமாடமேலாற்பிரசமென்கூந்தலோடு
முருகெழுமடநலார்தந்திருமுகத்துண்மைதேரார்
கருமுகிலென்பதம்மாகலைநிறைதருவீபத்தி
னருகமர்ந்ததுமறைத்தற்கஞ்சியதிறும்பூதென்பார். (௬௧)

செங்கயல்விழியாரொன்றுந்திருவனுருறுப்பேயென்றுந்
தங்களுளுணரார்கன்னிதவாச்சிலைகடகங்கும்பந்
துங்கவண்மகரஞ்சிங்கமொவ்வொன்றேதுலங்குமிங்குப்
பங்கமில்பாரிற்பல்லவெனப்பகருவர்வாளுடர். (௬௨)

வணக்கநன்குடையார்செல்வம்வாய்ந்துமேலாவர்நாளும்
வணக்கமில்லவர்கீழாவர்வறியராயெனறெரித்தாங்
கிணக்கவண்மூங்கின்மேல்கீழியைந்தயானத்துமேல்கொண்
டிணக்கநன்குடையசெல்வரியங்குறுசிறப்புமல்கும். (௬௩)

வடதிசைக்கிறையுநாணுமாப்பெருஞ்செல்வமுற்று
மிடமிகுமதைமதித்தலென்றுமில்லவரொஞ்ஞான்றுந்
தடமுகிலாதிநாணுந்தவாந்கொடையடைந்தும்யார்க்கும்
விடலிலரினியகூறல்விழையுமந்நகரமாக்கள். (௬௪)

பேரதிகாரத்தோடுபெருங்கண்ணோட்டமூநன்குள்ளார்
சாரருந்திறன்மையோடுதவாதவொப்புரவுமுள்ளார்
தேருமாசாரத்தோடுஞானமுஞ்சிறப்பவுள்ளார்
தீரரும்வளத்தாலோங்கிச்சிறக்குமந்நகர்வாழ்மாந்தர். (௬௫)

காவணமெங்குமிட்டுக்கரும்பொடுகதலியாத்து
மாவணவிதானந்தூக்கிவயங்குபொற்குடைகளோடு
பூவணத்தொடையுநாற்றிப்புதுப்புனலிறைத்துக்கைசெய்
தூவணரியமவீதிசுவர்க்கத்தைநரகஞ்செய்யும். (௬௬)

மங்கையர்பின்பான்முட்டுமைந்தர்கள்வடிவுவாய்ந்த
வங்கவர்முன்பான்முட்டுமவர்க்குளநாணுவார்க
டுங்கநன்மைந்தர்பின்பான்முட்டியதொடிக்கைநல்லார்
தங்கமற்றவர்முன்பான்முட்டவர்க்குளந்தகநாண்கொள்வார். (சுஎ)

வரையகத்துள்ளயாவும்வயலகத்துள்ளயாவுந்
திரையகத்துள்ளயாவுஞ்செருத்தலான்குலங்கண்மல்கு
தரையகத்துள்ளயாவுந்தழைதலாலியமவீதி
புரையறத்திணையோர்நான்கும்புக்கினிதமர்தல்போலும். (சுஅ).

மெல்லுவவொருபான்மல்கவிழுங்குவவொருபால்வீங்க
வொல்லுவபருகற்காயவுணுத்திறமொருபாலோங்கப்
புல்லுவபிறவுங்கொண்டுபொலிதருநியமவீதி
சொல்லுவபோகபூமித்தோற்றமேயனையதம்மா. (சுகூ)

## உண்ணகர்.

மிடைதருமைந்தர்மாதர்வேட்டுலாம்விழவுமாறு
விடைநகர்வளத்திற்சில்லவியம்பவும்வல்லர்யாரோ
கடையுறலென்றுமில்லாக்காமருசிறப்புவாய்ப்புற்
றடையவிண்ணகருநாணுமுண்ணகரறையலுற்றும். (எ0)

ஆசையின்மேனுமெய்தவள்ளலாரருள்வதெண்ணி
யோசையினுயர்பாலாழியொத்திடநன்னீராழி
மாசையின்றுயமேன்மைவளம்பெறல்குறித்துச்சூழ்ந்தாங்
கேசையிலிடங்குருசூழமகநகரிஞ்சிசூழ. (எக)

பாம்புரியெனவோர்நாமம்பகருவர்கிடங்கிற்கப்பேர்
நாம்புரியிதற்கேசாலுநாடுபல்பாம்புவாழ
வேம் * புரிவைப்பினுக்குமுரிமையின்மேவிச்சூழ்ந்து
தோம்புரிதெவ்வுமேவாவண்ணங்காப்பியற்றுஞ்சூளால். (எஉ)

எறிகளிறருகுமேவினுவப்புத்தொட்டூர்த்தல்செய்யா
தறியமாலாழியோடுமங்காந்துவிழுங்கவல்ல
செறிவலிக்கராங்கள்பல்லதிரிதருகிடங்குநன்னீர்
நெறியுயிர்த்திரையாவாற்றுற்கன்னியர்நிதம்பம்போலும். (எந)

தனையடைந்தவரையுள்ளேகொண்டபின்வெளிச்சாராம
னினைதரவொளிக்குங்குண்டுநீர்க்கிடங்கெந்தஞான்றுந்
தனையடைந்தவரையுள்ளேகொண்டபின்வெளிச்சாராம
னினைதரவொளிக்குமெந்நனின்மைப்பிரானேதேறோம். (எச)

பெரும்புறக்கடலிதென்னுபெருங்கிடங்கரையுட்கொண்டு
விரும்புறமுகில்கள்வீழ்ந்துவிரிபுனனிறையவுண்டு
சுரும்புறமலருந்தாருச்சூழ்சேடிவரையீதென்று
தரும்புறமதின்மீதேறுந்தலையடையாதினைக்கும். (எரு)

---

* வேம் - வெம்மை என்னும்பண்புப்பகுதியீறுதியிலுள்ள எழுத்துக்கள் கெட்டுமுதனீண்டு, வருமெழுத்திற்கு இனவெழுத்தாயிருந்து, விருப்பமென்னும் பொருளைத் தந்தது.

அஞ்சனாயகியாரோடுமமர்ந்தளவிலாவுயிர்க்குந்
தஞ்சமேயாகயாவுந்தருமொருவள்ளலார்த
மஞ்சவாம்புகழேபோலவானகங்கிழித்தப்பாலும்
விஞ்சவேசென்றதம்மாவிறலுடைநொச்சியிஞ்சி. (௭௬)

பொறிபலவடக்கியோவாப்புண்ணியமுதல்விபாகப்
பறிநிகர்சடைப்பிரானைப்பரவுதன்னகத்தேகொண்டு
சிறிதசைவேனுமின்றித்திகழ்நிலையமைந்தவாரை
மறிவறநோற்றல்வன்மைமருவியயோகிபோலும். (௭௭)

கொடிபலசெறியநிற்குங்கோணைமாமதிற்கணெண்பார்
படியின்மற்றுள்ளவாயபன்மதிலகத்துங்கண்டோ
நெடியவிம்மதிற்கட்காணேநிலவமேலுள்ளவேநான்
முடியபுட்பறந்தபோதுமுற்றுமோகாண்டலம்மா. (௭௮)

இம்மதில்சிறிதுகண்டவெமக்குநேமியங்குன்றென்னு
மம்மதில்காணவேண்டுமாசைசற்றேனுமில்லை
மும்மதில்புரிந்ததுன்பமுழுமையுமறக்குமாறிச்
செம்மதிலுயர்ந்துசென்றுதேவரூர்பலவுங்காக்கும். (௭௯)

கடக்கருமதிலோர்மூன்றுங்கடந்தசேவகனைத்தன்னு
ளடக்கியமதிலின்மேன்மையளப்பவரெவரோவாயில்
விடற்கருமுயரஞ்சொல்லவேண்டுமோகோளுநாளும்
படற்கரும்பொன்செய்மேக்குப்படியுருகிழங்கேசெல்லும். (௮0)

தம்மனமிதுபோற்கோணல்சமைந்ததென்றறிவிப்பார்போ
லம்மநல்யாழ்கைக்கொள்வாராயினுநவிலுமாற்றஞ்
செம்மையென்றறிவிப்பார்போற்றெள்விளியிசையெழுப்புங்
கொம்மைவெம்முலையார்சேரிகோலமார்துறக்கமேய்க்கும். (௮௧)

மின்னனார்கரங்குவிக்கமிளிர்சாமிகரங்குவிப்பார்
முன்னருமுத்தொன்றீயமுகந்துபற்பலமுத்தீவா
ரன்னர்நானொன்றேதோற்கவனைத்தையுந்தோற்பார்மைந்த
ரொன்னின்மற்றவரிலாபமெய்துநர்மண்மேலியாரோ. (௮௨)

மெய்வாய்கண்மூக்குக்காதாமைந்தற்கும்விடயமாகி
மைவாய்கண்மற்றைநல்லாரின்புசெய்வழக்குண்டேனுங்
கைவாய்மிக்குளபொன்முற்றுங்கவருபுவெறுமைசெய்து
பொய்வாய்நெஞ்சிவர்போல்யார்க்குந்துறவின்பும்புணர்த்திடாரோ. (௮௩)

எத்துணையளித்தபோதுஞ்சாலுமென்றேமுறுத
முத்தவெண்முறுவனல்லார்முதிரழற்பிரானேபோல்வா
ரத்தகுதிறனாலன்றேவனையருச்சிட்டநாளும்
வித்தகமறையோராதியாவரும்விருப்பிற்கோடல். (௮௪)

வாடுதலற்றசெற்றமணமலர்புனைதலானும்
பாடுதல்வாய்ந்தசூழும்படமழுக்குறுமையானுங்
கூடுதலிரவேயென்றும்பகலென்றுங்கொளாமையானு
மாடுதல்வல்லமாதராமடந்தையரோயொத்தார். (௮௫)

நெஞ்சுபிளந்துறுசெந்நீர்நிரம்பமாந்தினனதனா
லஞ்சுவெறிதலைக்கொண்டாங்கமரர்களைவருத்திடலு
மஞ்சுபொலிகளத்தான்பொன்மலரடிவீழ்ந்தவரிரப்பத்
துஞ்சுபடர்வலிவீரற்பார்த்திதனைச்சொற்றனனால். (௨௧)

வயவீரவிப்பொழுதேநரமடங்கல்வெறிமாய்த்து
நயமாரவருதியெனநங்கள்பிரானருள்செய்யச்
சயவீரபத்திரனுஞ்சரபவுருக்கொண்டெழுந்து
புயனேருமுடம்பினரமடங்கல்வலிபொருதழித்து. (௨௨)

ஈண்டுசருமங்கவர்ந்துகிளர்பெருமான்பெரும்பியலிட்
டாண்டுவணங்கினன்போனாதிவுதிப்பமாயவனு
மீண்டுபிழைக்கென்செய்வாமென்றிரங்கிக்கவலுற்று
வேண்டுபொருளருடிருமாயூரத்தைவிரைந்தடைந்தான். (௨௩)

மறமனைத்தும்பொடியாக்குமாதீர்த்தம்படிந்தாடித்
திறமனைத்துமருள்வள்ளல்சேவடிமேற்பணிந்தெழலு
நிறமனைத்துந்துழாய்ப்புனைவோய்நின்பிழைதீர்ந்தனையுலகை
வறமனைத்துந்தவிர்த்தோம்பிவாழென்றானெழுதகன்றான். (௨௪)

வேறுமொருகாலத்துவெய்யமாவலியென்பான்
மாறுதவிர்த்தெவ்வுலகும்வயங்கியதன்னடிப்படுத்துப்
பேறுதருமொருவேள்விபெயர்வறச்செய்திடல்குறித்தான்
சாறுகொளுமவனைவெலத்தம்பிரானருள்பெற்று. (௨௫)

ஆன்றதவக்காசிபற்குமதிதிக்குமொருமகவாய்த்
தோன்றவிகழ்குறளுருவிற்சென்றுமகக்களம்புகுந்து
மூன்றடிமண்கொடுவென்றன்மொழிந்தபடியவன்கொடுப்ப
வேன்றனனோங்கினன்றரைவிண்ணிரண்டடியுள்ளாக்கினன். (௨௬)

ஓரடிமற்றவன்றலைமேலுறவைத்துப்பிலத்தழுத்திப்
பாரமிகுசெருக்கடைந்தான்பண்ணவர்மற்றதுதேர்ந்து
நாரமலிசடையான்பானண்ணியிறைஞ்சினருரைப்ப
மாரனுடல்பொடித்தபிரான்வடுகனைக்கூயேவினான். (௨௭)

அன்னவன்வந்துடன்றுசமராடிவலியறச்சவட்டி
யுன்னரியவுடம்பின்றோலுரித்தொருசட்டையிற்பூண்டு
பின்னமறவொளிர்சட்டைநாதனெனும்பெயர்பூண்டான்
றன்னமர்கையவன்முதுகந்தண்டெலும்புகவர்ந்தமைத்து. (௨௮)

பார்புகழுமொருதண்டபாணியெனும்பேர்பெற்றான்
சீர்திகழுமொருகுதிகாற்சிறந்தநரம்பினைவாங்கித்
தார்பொருவவணிந்துநரம்பணியனெனும்பெயர்தாங்கி
வார்தருதன்கடுங்கோபமாற்றினான்வயிரவனே. (௨௯)

மாயனதுபொழுதனைத்துமறவாமலுளத்துணர்ந்து
நேயமிறன்பிழையகலநெடுங்கழுவாய்செயக்குறித்துத்
தேயமெலாம்புகழ்ந்தேத்துந்திருமாயூரத்தடைந்தா
னாயபுகழ்ப்பெருந்தீர்த்தமாடினனீறணிந்தான். (௩௦)

கண்மணிமாலிகைப்புனைந்துகருத்துறவைந்தெழுத்தெண்ணி
வண்மயிலைப்பெருமானைவள்ளலெனும்பெயரானை
யொண்மயிலோர்புறத்தானையுவந்தேத்திவழிபட்டான்
கண்மருவுநுதலானுந்திருவுள்ளங்களிகூர்ந்தான். (௩௧)

பற்பலகாற்பிழைசெய்துதண்டிக்கப்பட்டனையான்
மற்புயமாயவசிறியமதியொருவிவாழென்று
னற்புதனேயெல்லாமின்னருளென்றேயஞ்சலித்துக்
கற்புயர்மாமகள்கொழுநன்களித்தேத்திப்போயினான். (௩௨)

திருநெடுமாலவதாரமைந்திடத்துஞ்செய்தபிழைப்
பருவரன்மாய்த்ததுகவுரிமாயூரமெனுப்பதியில்
வெருவருமத்தலம்போலவிண்ணிடத்துமுண்டுகொலோ
பொருவருமாமுனிவீர்காள்புந்தியுறத்தெளிவீரோ. (௩௩)

திருமாலவதாரமூர்த்திகள்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௦௪௨.

# தருமன்பூசித்தபடம்.

ஏதப்படுந்திறமெல்லாமொழியவிமையவரு
மேதக்ககேள்விமுனிவோரும்வேந்தும்விதியுமொர்பான்
சாதந்தமைந்ததிருமாலுமுள்ளித்தகவணங்கி
யோதப்பொலியுந்திருக்கடவூரொன்றொருதலமே.

அந்தத்தலத்தைதம்படைமார்பிலக்கவணிசெய்குழை
சந்தச்செவியிற்பொலியச்சிறுகண்டைதாள்விளங்க
வந்தற்புதத்துயர்மாற்கண்டனென்னும்மழமுனிவன்
கந்தப்புதுமலர்தூய்ப்பெருமானைக்கண்டேத்தினனே. (௨)

செருந்திபுன்னைகமரவிந்தங்கூவிளஞ்செங்கழுநீர்
குருந்துமந்தாரந்துரோணமறுகுராவம்வழை
திருந்துகடுக்கைகரவீரமாதிச்செழுமலர்கொண்
டருந்தவமாமுனிபன்னாளும்பூசனையாற்றினனே. (௩)

இவ்வண்ணம்பூசனையாற்றிடுகாலையெழுபுவிக்குஞ்
செவ்வண்ணமாயவுலோசனம்வீசத்திருக்குளத்தோ
டவ்வண்ணமாயபெருமானருட்குரியானைவௌவத்
தெவ்வண்ணமேவிமறலிடபஞ்செலுத்தினனே. (௪)

கூற்றுவராக்கண்டுசங்கரவோகொடுநஞ்சமுண்டு
போற்றுபிரமன்முதலோர்க்குயிர்தந்தபுண்ணியவோ
வேற்றுமிசையுவந்தொள்ளடியாரையெதிர்பவவோ
தோற்றுபயந்தவிர்த்தாள்புகலென்றுதுதித்தனனே. (௫)

துதிக்குமதனுக்கிரங்கிச்சுயம்பெருஞ்சோதிமறை
மதிக்குங்கருணைப்பிழம்பாயவன்வெளிவந்துமின்னைத்
திதிக்கும்படியுற்றனமென்றருளிச்செயிர்த்துசின
முதிக்கும்படியெதிர்நின்றவன்மார்பிலுதைத்தனனே. (௬)

உதையொன்றுகொண்டுயிர்மாண்டாணமன்பின்னுயிரளிப்பக்
கதையொன்றுகையொடெழுந்தினிச்செய்யக்கடவதென்னென்
றிதையொன்றுவெற்பத்தனைபாவமேனுமிறுக்கும்வளந்
ததையொன்றுபூம்பொழின்மாயூரமாத்தலஞ்சார்ந்தனனே. (எ)

சார்ந்துதிருமுனர்த்தீர்த்தம்படிந்துதவாதவினை
யீர்ந்துபொலிதிருவெண்ணீறுபூசியெழுத்தைந்தெண்ணி
யோர்ந்துதிருப்பெருங்கோயிலைச்சார்ந்துருகிப்பணிந்து
தேர்ந்துபெருவள்ளலாரடிப்பூசனைசெய்தனனே. (அ)

புண்ணியமாரஞ்சனாயகிபாதமும்போற்றிசெய்து
கண்ணியவந்தலத்தீசானதிக்குக்கலந்துநயந்
தண்ணியமேன்மைச்சிவலிங்கமொன்றங்கமையநிறீஇத்
தண்ணியதீர்த்தமுந்தொட்டரும்பூசைசமைத்தனனே. (௯)

காலையிற்றன்செய்சிவலிங்கபூசைகதிர்ப்பச்செய்து
சோலையிற்பூங்குழல்பால்வள்ளலார்முன்றுனைந்துவந்து
வேலையிற்றோன்றுநிறத்தானெப்போதும்விழைந்திறைஞ்சு
மாலையிற்போற்றித்துதிபலவாகவழுத்துவனே. (௧0)

அத்தாவெனிலவர்தன்மையெண்ணாமலருள்சுரக்கும்
பித்தாகொடியவெனையுநன்காண்டருள்பேசரிய
சுத்தாதொழும்பர்தமெய்ப்பில்வைப்பேசுடரார்மணியே
முத்தாசெழும்பொழின்மாயூரமேயமுழுமுதலே. (௧௧)

காவாயெனிலவர்தன்மையெண்ணாதுகடைக்கணிக்குங்
கோவாயெனையுங்குறித்தாண்டுகொள்கொடுநஞ்சமுண்டுஞ்
சாவாய்மறைமுடிக்கெட்டாய்மெய்ஞ்ஞானத்தனிச்சுடரோ
மூவாய்செழும்பொழின்மாயூரமேயமுழுமுதலே. (௧௨)

அன்னோவெனிலவர்தன்மையெண்ணாமலருள்சுரக்கும்
பொன்னோவெனுஞ்சடையாயடியேனையும்பொற்புறவாள்
பன்னோதகவுந்தவிர்தரயாரும்பரிந்துதொழு
முன்னோய்செழும்பொழின்மாயூரமேயமுழுமுதலே. (௧௩)

என்றுதுதிக்குங்கொடுங்கூற்றுவன்முன்னெழுந்தருளிக்
கன்றுமிருகங்கரத்தேந்தினான்கொடுங்காலவனை
யொன்றுமிழைதவிர்ந்தாய்முன்னையாட்சியினொன்றிடுதி
பொன்றுதலின்னமைப்போற்றுநர்பாற்புகுதரினே. (௧௪)

அன்றியுமித்தகுமாயூரங்கண்டவராரெனினுங்
கன்றியுநின்னகர்காணப்பெறார்கருதாயெனினின்
வென்றியுமாக்கமுமாட்சியும்யாவும்விளிந்தொழியு
மொன்றியுமொன்றக்கலப்புறுவார்க்கஃதுறுவதன்றே. (௧௫)

கூடியவன்பினொருநீயருச்சித்தகோசத்தியா
னீடியபேரருளோடுறைவோமந்நிறைகுறியும்
பாடியவாவியுமொருநின்பேராற்பரவுகவென்
றாடியகூத்தன்மொழிந்தான்மறைந்தனனாவயினே. (௧௬)

புத்தியென்றேற்றுப்பணிந்துதன்னூர்ப்புகுந்தானியமன்
சித்திபெற்றெய்தியதோர்ந்துதற்சேர்ந்தகணங்கட்கெல்லாம்
பத்திசெய்வள்ளலருளொடுத்தோதிப்பரவுசெங்கோ
லெத்திசையுஞ்செலமுன்போனடாத்தியிருந்தனனே. (௧௭)

தருமன்வரம்பெற்றகாரணத்தாலத்தலம்பொலிந்து
தருமபுரஞ்சிவலிங்கம்பொலிந்துதருமலிங்கந்
தருமம்வளர்க்குந்தடமும்பொலிந்துதருமதடந்
தருமமுணர்ந்தவரொன்றேறுதிடும்பெயர்சார்ந்தனவே. (௧௮)

காரட்டநீலகண்டப்பெருமானமன்காய்ந்தியற்று
போரட்டகாரணத்தாலந்தத்தானமும்போற்றுமொரு
வீரட்டமாயதுமாயூரத்தெல்லையுண்மேவியது
பேரட்டமூர்த்தியங்கக்கோலங்கொண்டுபிறங்குவனே. (௧௯)

காலசங்காரப்பெருமானைக்காலன்பதிட்டைசெய்த
வாலமுண்டானையிடமோரிரண்டிறுமண்ணித்தொழா
மூலபண்டாரமென்மாயூரத்தாநிமுனம்பணிவார்
சாலவுண்டாகுமின்பத்தினராகித்தழைபவரே. (௨0)

தருமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் ௧0௬௨.

# காமன்பூசைப்படலம்.

கனிவனப்புமை, பனிவரைத்தலைத், தனியுதித்தநாட், குனிபொருப்பினன். (௧)

நாரவாவிமா, பூரமாநகர்ச், சாரவாயகா, லாரவாந்திசை. (௨)

ஆய்தருங்கடுக், காய்வனத்திடை, மாய்வில்யோகமுற், றேயிருந்தனன். (௩)

ஆயநாளுயி, ராயபாவையு, மாயபோகமற், றுயவைகின. (௪)

மாயனெண்ணுபு, நாயன்மேற்கணை, போயின்னேதொடு, சேயனேயென. (௫)

மாரவேளுமோ, ரீரமார்கணை, நேரவாய்த்தொடுத், தாரவோடினன். (௬)

ஏறுசேவகன், கூறுமோர்விழி, வீறுதீயினு, னீறுபட்டனன். (௭)

இரதிமாழ்குற, வரவப்பூணினன், பரவனங்கனும், வரமளித்தனன். (௮)

உருவந்தற்கலான், மருவிலானைக்கண், டொருமடந்தையுட், பொருமநீர்ந்தனள்.

மழைபொருங்களத், துழைகொள்கையற்குப், பிழைசெய்தாமெனக், குழையு
[நெஞ்சினன். (௧0)

தாரமாதொடு, மீரவான்பொழி, லாரமேயமா, யூரமெய்தினன். (௧௧)

பாவநாசநீர், மேவமூழ்குபு, தேவதேவையைத், தேவன்போற்றுவான். (௧௨)

தஞ்சமேயென, வஞ்சலம்மையோ, டெஞ்சலின்றிவேண், மஞ்சன்போற்றுவான்.

போற்றுநாளிடை, நீற்றுமேனியா, னுற்றுபோரு, ளேற்றுவாழ்த்தனன். (௧௪)

நட்டமாடிநேர், பட்டவேளுடல், சுட்டதாணம்வீ, ரட்டமாயதே. (௧௫)

அந்தத்தானத்தை, முந்தப்போற்றிடி, னெந்தப்பேறுமே, வந்தத்தோயுமே. (௧௬)

பாரவாவுமா, யூரவெல்லையுட், சாரவானர்வா, யாரவேத்திட. (௧௭)

இட்டமாயவீ, ரட்டநான்கெனிற், பட்டமான்மியந், சட்டயார்சொல்வார். (௧௮)

காமன்பூசைப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௪௦௮௦.

# தீர்த்தவிசேடப்படலம்.

கரவுதீர்மனம்புகுங்கணிச்சியங்கைவள்ளலா
ருரவுசேருமபிமுகத்தினுற்றநாளுமுயர்புறம்
விரவுபாவவினைமாய்க்கவெந்தழற்சுவாலையாம்
பரவுமான்மியங்குலாயபாவநாசதீர்த்தமே. (௧)

அட்டமூர்த்தியாதிநாளிலங்கைதாங்குசூலத்தாற்
றெட்டகாரணத்தெரிக்குசூலதீர்த்தமென்னவு
மிட்டவாதிநாளினுயதெண்ணியெண்ணிலாவளம்
பட்டவாதிதீர்த்தமென்னவும்பகர்ச்சிமேயதால். (௨)

தேவதேவவள்ளலார்திருக்குசன்னிதித்தலைப்
பூவராதியாவரும்புகுந்துமூழ்கின்மற்றவர்
பாவநாசமாக்கலாற்பாவநாசதீர்த்தமென்
றேவரும்புகழ்ந்துரைக்குநாமமெய்திற்றப்புனல். (௩)

தருமமேவநல்கலாற்றருமதீர்த்தமிகுதியு
மருவருத்தநல்கலாலருத்ததீர்த்தமாண்புசால்
பொருவில்காமநல்கலாற்காமதீர்த்தம்புன்மைதீர்த்
திருவுமுத்திநல்கலான்முத்திதீர்த்தமென்பரால். (௪)

செம்மைமேனிவள்ளலார்திருக்குசொற்றலைக்கொடு
மும்மைஞாலமீன்றதேவிமூழ்கமுன்னுருத்தரு
மெம்மையாள்பெருந்தடத்திலங்குமான்மியம்பல
வெம்மையார்மறத்தினைக்குமைக்கும்வீறுமிக்கதே. (௫)

கரையின்மேல்விருக்கமேவுகாமர்மஞ்ஞைநீழலைப்
புரையில்வாவிபூடுதோன்றல்போக்குமுன்னமூழ்கிய
வரையின்மஞ்ஞையாதியாயமஞ்ஞையின்கண்வாங்கிய
விரைகுலாமுடம்புதன்னுள்வைத்திருத்தல்விழையுமே, (௬)

அன்னமாதியெண்ணில்புட்களன்னநீர்ப்பயின்றிடன்
முன்னமாமயூரமெண்ணிலாதமூழ்கித்தேவரு
நன்னர்மேவுதிறனுணர்ந்துநாமமெய்தலாமெனப்
பன்னவாரிசப்புனற்பயிற்சியாற்றலொக்குமே, (௭)

அறைவிராயநான்முகத்தனைந்தாழ்விருக்கைபெற்
றிறைவிராயபல்லுயிர்ச்சிருட்டியன்னமேய்ந்தரு
மறைவிராயவொலிவிளக்கிமுளரியோம்புமாண்பினும்
பொறைவிராயமண்படைத்தபுலவனொக்குமப்புனல். (௮)

சங்கநேமியேந்தலாற்றண்டுழாயளாவலாற்
பங்கயக்கண்மாவொடும்பார்மகட்டழுவலாற்
அங்கவாமைமீனுருத்தொடர்ந்தவாந்திறத்தினு
லங்கண்ஞாலமுழுதுமோம்புமண்ணலுங்கடுக்குமே. (௯)

இருவராலளந்திடாமையியைதலால்விலங்கலீன்
பருவராதகோதைவந்துபண்பளாயவத்தலா
லருவராமல்யாருமண்ணியடர்மலங்கழித்தலாற்
பொருவராதபுண்ணியப்பிரானையொக்கும்பூம்புனல். (௧௦)

வேறு.

திருந்தியபாவநாசத்தீர்த்தந்தோய்சென்னியெல்லாம்
பொருந்தியதெய்வக்கங்கைப்புண்ணியதீர்த்தந்தோயு
மருந்தினுமினியநன்னீரிருகண்ணுண்மகிழ்ந்துகாண்பார்
வருந்துதலொழிந்துமுக்கண்வாய்ப்படுதற்கையமின்றே. (௧௧)

புரவொன்றுபாவநாசப்புண்ணியப்பெருந்தீர்த்தத்தி
ணரவொன்றேர்மண்கேத்தையங்காந்துபத்தியுண்ணை
விரவொன்றுகண்டமாதியியைந்துவைத்தவைபின்னை
குரவொன்றுமதனைப்பூண்டதும்பராதியர்வியந்தார். (௧௨)

பூதமோரைந்துமொன்றாய்ப்பொலிதனக்குள்ளதாய
வேதநயின்றுதிதெரிந்தாங்கெங்கணுமலர்வகுத்து
மாதரம்பொலியமுற்றிருந்தனைமாதல்வேண்டி
மாதர்மற்றவைபொருந்துவாய்ந்துசேர்ந்திருந்தன்மானும். (௧௩)

அன்னசெங்கமலமேலாலணியினையமருங்காட்சி
மன்னவிங்கடுத்துமுற்றுமாட்சிமையாளாங்கை
பன்னமுத்திறம்போற்பெற்றுப்பரிப்பதுமிதைத்தானென்று
நன்னயம்பொலியயார்க்குமுணர்த்துமோர்கலமேபோலும். (௧௪)

திருந்தியபாவநாசத்தீர்த்தமேல்கரைப்பாலையன்
பொருந்தியநிருமன்வைத்தெபாற்பமைசிராத்தஞ்செய்வோர்
பெருந்துயராற்றிலாழும்பிதிரரைக்கரையேற்றிச்சீர்
தருந்திருச்சிவலோகத்திற்றங்கவேற்றினவராவார். (௧௫)

மருவரும்பாவநாசவளம்பொலிதீர்த்தக்கோட்டிற்
பொருவருஞ்சிராத்தஞ்செய்யும்புண்ணியர்தருமென்னொன்றற்
கொருவருஞ்சிவலோகத்திலொருபத்துநூறுண்டெல்லை
வெருவரும்பிதிரர்மேவவிட்டவராவாம்மா. (௧௬)

வயங்குறுமாண்டின்கேற்றமருவுமீரயனத்தோற்ற
நயங்கிளர்திங்கட்டோற்றநனைமலியீருவாக்க
ளியங்கிருசுடரைநாகம்விழுங்குநாளிவைமுன்னாகப்
பயங்கிளர்விசேடநாளிற்படிதரிலதிவிசேடம். (௧௭)

எனறுதுதித்துக்கணேசனுனைபெற்றேகுபுவள்ளன்முன
நன்றுதிருமஞ்சனமுதல்யாவுநயம்பெறச்சேகரியா
வன்றுபெருதவுளத்தொடுமோட்டுதலாதியினிதியற்றித்
துன்றுபன்மாணவரோடுமெதிர்நின்றுதோத்திரஞ்சொல்லுவனால். (௬)

## வேறு.

### ஒருபோகுமயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

மாமேவுமுகிறவழும்வளமேவுபல்சிமயந்
தாமேவுசையமெனுந்தனிமேவுவரைநின்றும்
வயங்குபலமணித்திரளுமால்யானைக்கோடுகளு
மியங்குகதிர்புரைபொன்னுமெறிவிரைச்சந்தகிற்றுணியு
மிருகோடுஞ்செறியவெடுத்தெறிந்துதுவைத்தெவ்விடத்து
மருகோடும்புனற்பொன்னியாறுலாஞ்சோணாட்டிற்
காமருபல்வளம்பொலியுங்கவுரிமாயூரத்தின்
மாமருவஞ்சுடர்பரப்புமணிக்கோயில்வீற்றிருப்போய்.

அடைப்பதுமத்தவனணுகியன்பினுராதிக்கப்
படைப்பதுமற்றுனதென்றுபாங்குபெறக்கொடுத்தருளிக்
கலங்காவலவுணருளங்கலங்காமல்வந்திறைஞ்ச
நிலங்காவலுனக்கின்றுநேர்ந்தனமென்றருள்செய்து
புரந்தரன்முனெண்மர்களும்பொருந்துமலர்தூயிரப்ப
நிரந்தரமெண்டிசைக்காவனீர்புரிமினெனப்போக்கி
யாறேருருமிருகதிருமண்ணேரும்பாதலம்வா
ழேறேருந்தொழவியைந்தவினிதளித்தவருளோய்கேள்.

### இவையிரண்டும் எட்டடித்தரவு.

அம்மையொருபறவையுருவாகவருள்புரிந்தனைநீ
செம்மையொருபறவையுருச்செறிந்தமைக்குத்தகல்குறித்தோ.
மயிலுருவப்பூசையினேமாதேவிபன்னுளும்
பயிலுருவப்பூசையினேபரம்பரநிற்கதிவிருப்பம்.
மயிலுருவப்பூசையெனில்வயங்குநின்மேனியிலுமைமுன்
பயிலுருவப்பூசைபோற்பங்கொருடிக்கைதோயாதே.
தோகையாய்நடித்ததினுஞ்சுந்தரிக்குமன்றிடைநின்
ரோகையாய்நடித்ததுமிக்கோகையாய்முடிந்ததே.
மாவடியின்வீற்றிருப்பாய்வடிவரியேனென்பாய்மென்
பூவடியாள்கொடுத்தவடிப்புந்திசெயும்வடிவன்றே.
யருளபயாம்பிகையைமணமாற்றிறுயாற்றுயேற்
றெருளமறைவிதித்தவிதிதெளிவிப்பாரிலையன்றே.

### இவையாறுந்தாழிசை.

அரியயன்முதலியவமரர்பலருமுய- வருவிடமமுதுசெய்மணமலிகருணையை.
இமையவர்முதலியவெவருமுள்ளுலைதர- வமைதருதிரிபுரமழல்செயுமுறுவலை.
வருவதுகருதலின்மறையவனிழிவுரை- தருதலைகரமுறுதகைபுரியுகிரினை. [வினை,
நிசிசரரிறைவன்மெய்நெறுநெறுநெறுவென- வசியொழிவரைநிறுவடியொருவிர

இவைநான்குமராகம்.

ஒலிகொண்டபடைத்தல்புரவுள்ளனவீற்றொருங்கழிக்கும்
வலிகொண்டநினக்கொருவன்மகமழித்ததொருபுகழே.
சிங்கவிறன்மாய்த்துரிகொடிறலுடையநினக்கொருமா
தங்கவிறன்மாய்த்துரிமேற்போர்த்தியதுந்தக்கதே.
யெண்ணில்கூற்றெய்தினுமாய்த்தெழுநின்றோர்நாமமெனிற்
கண்ணில்கூற்றொன்றனுக்காக்காலெடுத்தலழகிற்றே.
நினைக்குறிப்பார்பல்காமர்நேர்வரினுமாய்த்திடவெய்
வினைக்குறிப்பாரொருவனுக்காவிழிதிறத்தல்வேண்டுமே.
பல்லுயிரைமயக்கிவினைப்பயனூட்டுந்திறலாய்க்குச்
சில்லுயிரைமயக்கிமயற்றிறமூட்டலருமைத்தே.
இத்தலத்தின்புற்றொருக்கெளியையாயரிதாகீ
கைத்தலத்தாமலகமெனக்காட்சிதருங்கருத்தென்னே!

இவையாறும்பெயர்த்தும்வந்ததாழிசை.

யோகவித்தமனெனுமொருவன்போற்றவி - வேகவுத்தமக்கதிவிழைந்துநல்கினை.
குண்டினகோத்திரக்குமரற்காநர - கண்டினபிதிருக்கருள்சுரந்தனை.

இவையிரண்டும் நாற்சீரோரடியம்போதரங்கம்.

அரியயன்முதலியர்க்கரியகாட்சியை.
மரியவெவ்வுயிரினுமருவுமாட்சியை.
பிரியமிக்கவருளம்பிறங்குமாட்சியை.
யுரியவொன்பஃதெட்டாரொருவும்பூட்சியை.

இவைநான்கும்நாற்சீரோரடியம்போதரங்கம்.

மறைமுதலெவையுநவின்றனை.   மருவினர்பிரிவறநின்றனை.
பறையடியவர்பெறுமொன்றனை.   யவரடுமலவலிகொன்றனை.
கறைதபுமுயிரொமதென்றனை.   கருதலர்வலிகெடவென்றனை.
நிறைதரநடநவின்மன்றனை.   நிகழ்கருணையொடுகவின்றனை.

இவையெட்டும் முச்சீரோரடியம்போதரங்கம்.

இந்துசூடினை.   வந்துகூடினை.   ஏதநீங்கினை.   போதமாக்கினை.
பந்தமாற்றினை.   சந்தமாற்றினை.   பண்செய்வாயினை.   எண்செயாயினை.
நிந்தையற்றனை.   அந்தைசெற்றனை.   நேயமூட்டினை.   மாயம்விட்டினை.
சுந்தரத்தினை.   யந்தரத்தினை.   தொக்கசோத்தினை.   நக்கசூத்தினை.

இவைபதினாறுமிருசீரோரடியம்போதரங்கம்.

எனவாங்கு, இதுதனிச்சொல்
யாவரும்வழுத்துமெண்டோட்செல்வ - பாவரும்புகழபயாம்பிகைபாக
மறைமுடிவிளங்குமாயூரேச- நிறைதரவெவையுநிரப்புபெருவள்ளால்   [ருத்தி
விழைந்தடியேன்செய்விண்ணப்பமொன்று -குழைந்தநின்னடியார்கூட்டம்பொ
யொன்றியுமொன்றுறுவக்கு- நன்றிசெயின்பநயந்தளிக்குகவே.   (௧௦)

இவையெட்டடியான்வந்தநேரிசையாசிரியச்சுரிதகம்.

## வேறு.

என்றுதுதித்துவணங்கிப்போற்றியெம்பெருமாட்டிதிருமுன்சென்று
நன்றுசிறப்பப்பணிந்தெழுந்துநாடுந்திருமஞ்சனமுற்கொண்டு
கன்றுதவிர்த்திடும்பூசையாற்றிக்கைகள்குவித்துள்ளுருகிச்சூழ்ந்து
துன்றுமகிழ்ச்சியின்முன்னர்நின்றுதோத்திரமின்னனசொல்லலுற்றான். (கக)

## வேறு.

கருமுகில்விளர்ப்பக்கறுத்துநெய்த்திறைவன்கண்கவர்கருங்குழல்போற்றி
யொருபரம்பரன்செஞ்சடைப்பிறைவிளர்ப்பவுற்றொளிர்திருநுதல்போற்றி
பெறுமறைத்துதிபோடிழிந்தவென்றுதியும்பிறங்கவேற்றருள்செவிபோற்றி
மருவுபல்லுயிரும்வாழ்தரக்கருணைவழிதருவிழித்துணைபோற்றி. (கஉ)

விறல்கெழுமேருவில்லியைப்பொருதுவெலும்புருவச்சிலைபோற்றி
யுறல்கெழுகோம்பியுருத்திரிநாசியொள்ளியகுமிழ்மலர்போற்றி
யறலிலாதமைந்தநீர்நிலையென்னலாகியகபோலங்கள்போற்றி [ற்றி. (கங)
மிறல்செய்வெவ்விடமுண்டவர்மறைச்செவ்வாய்க்கின்பஞ்செய்பவளவாய்போ

அழனகைகுளிருநன்னகைபாகவணிநகையெழுநகைபோற்றி
தழல்சுடுகுழலும்யாழுமொவ்வாதுதமிழ்நிகர்த்தெழுமொழிபோற்றி
கழலரிதாகமங்கலம்பூண்டுகந்தியிற்பொலிகளம்போற்றி
புழல்படுபசுவேயிணைதராதழலுட்புகப்பொலிதோட்டிணைபோற்றி. (கச)

ஒரும்யாழ்த்தண்டின்வனப்பறச்சவட்டியொளிகிளர்முன்கரம்போற்றி
யூருவிஞென்றுபநியவெவ்வுயிர்க்கும்பயந்தபுமொருகரம்போற்றி
சேருமொண்காந்தளிதழெனச்சேர்ந்துதிகழிருகைவிரல்போற்றி
சாருவின்மூக்கிற்பொலிந்துசேந்தொளிருந்தண்மலர்விரலுகிர்போற்றி. (கரு)

வாருமொள்வடமும்புனைந்துமெய்ஞ்ஞானம்வழிதரத்தருமுலைபோற்றி
பாருமற்றுலகுமடங்கியுந்தோற்றுப்பண்புதரத்தெழில்போற்றி
கூருநல்வனப்பினந்தியாவட்டங்குலவுமுந்திச்சுழிபோற்றி
தேருமூவுலகுளிருப்பதுதெரித்துத்திகழுமும்மடிப்பெழில்போற்றி. (கசு)

செய்யவான்பொலிந்தமின்னெனவுடுத்தசெம்பட்டுச்சிற்றிடைபோற்றி
யுய்யவெவ்வுயிரும்வெளிவரத்தோற்றியுருக்கிளர்கடிதடம்போற்றி
மையசெம்பட்டான்மறைத்திடப்பட்டவரம்பையங்கவானெழில்போற்றி
மையகல்காமதேனுவின்மூக்காமணிமுழந்தாளெழில்போற்றி. (கஎ)

திருவளர்கணைக்கால்போற்றியொண்கரடாஞ்சிறுதராசுத்துணைபோற்றி
யுருவளர்கமடப்புறவடிபோற்றியொளிகெழுவிரலுகிர்போற்றி
மருவளர்தளிரிற்சேந்தடியேங்கண்மனம்புகுமுள்ளடிபோற்றி
குருவளரபயாம்பிகைப்பெருமாட்டிகுலாவுநின்பேரெழில்போற்றி. (கஅ)

என்றுதோத்திரஞ்செய்தங்குநின்றேகியெழில்வளர்குமரநாயகன்மு
னன்றுசென்றிறைஞ்சிமஞ்சனமாதிநலத்தகக்கொண்டுபூசித்து
நின்றுநெக்குருகிச்செந்தமிழ்மணக்குநிகரிலாச்செய்யவாய்முனிவ
னென்றுமிக்கன்பின்மகிழ்ச்சிமீக்கிளைப்பவுறுதுதிசெய்யலுற்றனனே. (ககூ)

வேறு.

பூமிமணவாளனுமொண்புண்டரிகத்தவனு
நாமிதுசெய்குவதென்றுநயந்துளத்திற்கருதித்
தோமிரியவடைந்தேத்துஞ்சுந்தரனைக்குமர
சாமிதனைவணங்காததலையென்னதலையே
சரவணபவனைவணங்காத்தலையென்னதலையே. (உ0)

முந்தனுயிர்க்குயிராயமுதல்வனடியவர்சம்
பந்தன்வலிகெழுபுயங்கள்பன்னிரண்டுமனையுஞ்
சந்தனொருபிறையனையதந்தனிளையவனங்
கந்தனுருக்காணாதகண்ணென்னகண்ணே
கடம்பனுருக்காணாதகண்ணென்னகண்ணே. (உக)

ஈடியேறுமலரோனைக்கடுஞ்சிறையில்வைத்துப்
படியாதியெவ்வுலகும்படைத்தருளும்பிரானை
முடியாத்முதலோனைமூவர்பெருமானை
வடிவேலன்றனைப்பேசாவாயென்னவாயே
வள்ளிமணாளனைப்பேசாவாயென்னவாயே. (உஉ)

காவலான்முதற்றேவர்கைகுவித்துப்போற்ற
வேவலாளுகியசூரொருமொழியச்சவட்டி
மேவலானினிதமையும்விண்ணாடுபுரந்த
சேவலான்சீர்கேளாச்செவியென்னசெவியே
செவ்வேடன்சீர்கேளாச்செவியென்னசெவியே. (உ௩)

நந்தானைமுகற்கிளையநாயகனையெமக்குந்
தந்தானைத்தன்சரணந்தன்னடியார்க்கொருதோ
முந்தானையுலகீன்றவுமையாள்கண்மணியின்
வந்தானைநினையாதமனமென்னமனமே
மயிலானைநினையாதமனமென்னமனமே. (உச)

தீங்கோயுமவுணர்குலஞ்சிதைந்தழியமாட்டிப்
பாங்கேயுமமரர்சிறைவிடுத்தருள்பண்ணவனை
நாங்கேடில்பதமடையநன்றுபுரிந்தருளுங்
காங்கேயன்றொண்டுசெயாக்கையென்னகையே
கந்தவேடொண்டுசெயாக்கையென்னகையே. (உரு)

வேறு.

இவ்வண்ணந்துதித்தபின்னரிருந்தமிழ்முனிவனென்பான்
செவ்வண்ணம்வாய்ந்தவாய்ந்தசிந்தைமாணுக்கரோடு
மவ்வண்ணம்பெருமான்முன்னரணுகியானந்தம்பொங்க
நவ்வண்ணமுழுதுமாய்த்துநல்லருள்பெற்றுப்பின்னர். (உசா)

இகலருமாபூரத்தினெல்லையோசனையுஞ்சூழ்ந்து
புகலருமாங்காங்குள்ளதலமெலாம்போற்றிப்போற்றி
யுகலரும்பெருந்தவம்பூண்டொள்ளியபொதியஞ்சார்ந்து
பகலருமகிழ்ச்சிபொங்கப்பரவிவீற்றிருந்தானன்றே. (உஎ)

அகத்தியமுனிவன்செய்தவரும்பெறற்கூபமாய
வகத்தியதீர்த்தமாடியவனினிதருச்சித்துய்ந்த
வகத்தியவிநாயகன்பொன்னடிவழிபாடுசெய்வா
ரகத்தியக்கங்களைந்தேயரும்பெரும்போகத்தாழ்வார். (உஅ)

மேதகவமையமேவுமகத்தியவிநாயகற்கு
மோதகமாதிவிசேடவிலேதார்வைசாத்தி
மாதகவமையப்பூசைவயக்குவார்யாவரேனும்
பாதகமனைத்துநீங்கிப்பரகதிச்செல்வாராவர். (௨௯)

குறுமுனியன்பிற்செய்தருணங்கெழுதோத்திரத்தை
மறுவறக்கற்றுநாளுந்துதிசெயுமாண்புமிக்கோர்
வறுமைநோயடையாரூறுமருவுறாரடையவேண்டு
முறுதியேபெற்றுவாழ்வாரவர்க்கிணையுலகத்தியாரே. (௩௦)

அகத்தியர்பூசைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௧௧௫௫.

# கண்ணுவர்பூசைப்படலம்.

கற்றருள்ளகலாதகண்ணுவமாமுனியென்பான்
பற்றுயமனைவியொடுபொருவுபுகழ்ப்பெருங்காபி
யுற்றுதாவுசிறப்பவுயர்கங்கைமூழ்கிடுவான்
வற்றுநதிவளைமாயூர்வணங்கடக்கும்வழிநடப்பான். (௧)

வழிநடக்குமவ்வேலைமடமாதரொருமூவர்
கழிநலத்திறுருடம்புகறுத்துவழியெதிர்ப்பட்டார்
பழிவளைத்தபுலைமாதரொன்றுமுனியுளம்படர்ந்து
கழிகவயலிடத்தென்றுபேசாதுக்கையசைத்தான் (௨)

கையசைத்தற்ககலாமைகண்டுமுனிகனிசினந்து
பொய்யமையும்புலைமடவீர்போமினயலெனப்புகன்றான்
மெய்யமையுநீயாவன்விளம்பெனக்கண்ணுவமுனியான்
செய்யமனையொடுங்கங்கையாடச்செல்லுவனென்றான். (௩)

கண்ணுவனிப்படியுரைக்கவவர்நகைத்தார்களையவரு
ளொண்ணுதன்மந்தாகினியீதுரைசெய்வாண்முனிவகேள்
விண்ணுதலுங்கங்கையான்மேவியமற்றிவள்வாணி
யென்னுதல்செயிவளோகாளிந்தியெனவெடுத்துரைத்தாள். (௪)

மூவருமிப்புலையுருவமுன்னியதென்னெனவினவத்
தாவருமாபாவமொலாந்தலைப்பட்டெம்பான்முழுக
வோவருமப்பாவமேற்றுடம்புகறுத்திழிவுற்றே
மேவருமாயூரத்துவிரும்பிடபதீர்த்தத்தில். (௫)

முழுகியொழித்தாங்கமருமுதல்வனருளினுமூழ்கிப்
பழுதுதவிர்த்திங்கடைவோமென்றுபகர்ந்தனர்போனார்
செழுமறைக்கண்ணுவமுனியுமீதென்றுமெனத்தெரிவான்
வழுவின்மனையாட்டியொடுமற்றவர்பின்றொடருற்றான். (௬)

அந்தமூவரும்புனறூட்டமைந்ததிருமாயூரச்
சந்தமிகுமிடபதீர்த்தத்துறையிற்படிந்தாடி
நந்தவமைதன்னுருவநண்ணினார்தேசுற்றார்
பந்தமகனீறணிந்துபரம்பரனைத்தொழவெழுந்தார். (௭)

ஒளிவளராலயம்புகுந்தாரொருவள்ளற்பெருமானை
யளிவளர்பன்மலர்க்கூந்தலஞ்சனாயகியுமையைத்
தெளிவளரன்புறத்தொழுதார்தேமலர்கொண்டருச்சித்தார்
களிவளருண்மகிழ்ச்சியராய்க்கன்னியர்மூவருமீண்டார். (அ)

காமருதம்மிடம்புகுந்தார்கண்டனன்கண்ணுவமுனிவன்
மாமருமந்தாகினிசேர்வாஞ்சைமனத்தறவொழித்தா
னாமருவின்சுவையிடபதீர்த்தநீர்நயந்தாடி
யேமருவப்புனற்பெருமைதெரிதரவாங்கெடுத்துரைப்பான். (கூ)

எல்லீருமிதுகேண்மினெல்லாரும்படிந்தாட
வல்லீருங்குழன்மூவராய்தருசானவிவாணி
சொல்லீரும்பெரும்புகழ்க்காளிந்தியிவர்தொகுமறத்தால்
வில்லீருங்காருடம்புமேவியிவணடைகுற்றார். (க0)

இடபதீர்த்தம்படிந்தாரினிதமைதம்முருப்பெற்றார்
கெடலருமற்றவர்பாவங்கெடுத்திந்நீரோற்றிருந்தும்
விடலருமுன்னையினுநனிவிளங்கியதீதிசயமே
மடமயிலோர்பாலுடையவள்ளலாரருளிதுவால். (கக)

கண்ணாரக்கண்டனன்யானென்றெடுத்துக்கழறினன்
மண்ணாடாதிசயித்துவாழ்த்திமூழ்கினருய்ந்தார்
விண்ணாடர்மலர்தூவிவிழைந்தாடிமகிழ்சிறந்தா
ரெண்ணாடுகண்ணுவனுமிரியாதகளிப்பினனாய். (கஉ)

பின்னுமனையாட்டியொடும்பிறங்கிடபப்புனலாடி
மன்னுதிருநீறணிந்துவயங்கியகண்மணிபூண்டு
துன்னுபொருட்பதமைந்துஞ்சவைகொளவுட்கணித்ததற்பின்
மின்னுமணிக்கோபுரங்கண்மிளிர்பெருங்கோயிலையடைந்தான். (கங)

அடியார்தம்பெருவாழ்வையளவிலாக்கருணையனைக்
கொடியார்முப்புரம்பொடித்தகோமானைமிகமுயன்று
நெடியானுநான்முகனுந்தேருதற்கின்மலனை
வடியார்பைங்கொன்றையணிமாபூரேசனைத்தொழுதான். (கச)

அடங்காதபெருங்காதலாருகவனையபிரா
னிடங்காவல்கொண்டுறையுமெம்பெருமாட்டியைக்கருணை
மடங்காதபெருஞ்செல்வவாழ்க்கைமுதல்வியையன்பு
தொடங்கார்வத்தொடும்போற்றித்தொழுதெழுந்தான்கண்ணுவனே. (கரு)

இந்தவிதமிருவரையுமியைதரப்பன்னாள்பூசித்
தந்தமிலாப்பரம்பரன்பேரருள்பெற்றெண்ணியதடைந்து
நந்தமலர்க்குழன்மனைவிதன்னொடுங்கண்ணுவமுனிவன்
சந்தமிகுதன்னிருக்கைசார்ந்துவாழ்ந்திருந்தனனே. (கசு)

கங்கைமுதன்மூவருக்குங்கலந்தபெரும்பாவமறுத்
தங்கையிறுமலகமெனமுன்னையுருவளித்ததெனிற்
சங்கையிலாவிடபதீர்த்தப்பெருமைசாற்றுநர்யார்
நங்கையொருபாலுடையநம்மானேசொலுந்திறத்தோன். (கஎ)

கண்ணுவர்பூசைப்படலம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம். ககருசு.

# இலக்குமிபூசித்தபடலம்.

இந்திரப்பிரத்தமென்னுநகரத்திலென்றும்வாழ்வா
னிந்திரதத்தனென்னுமிருபிறப்பாளனில்லா
ளிந்திரன்மார்பம்புல்லுமிந்திராணியினுமாயேயா
ளிந்திரையினுமேர்வாய்ந்தாளிலக்குமியென்னும்பேராள். (௧)

அனையவடவனைவஞ்சித்தகத்துளபொருள்களெல்லாந்
தனையினிதீன்றதந்தைதாய்மனைப்புகுந்திவிட்டா
ணினைதருமறனுளோரோர்நாளாகண்டுநோர்நினைந்தான்
வினைவலியவனுண்கண்டத்திட்டுயிர்வீந்தாளன்றே. (௨)

வீந்தவளொருபேயாகிமேதினியுழலுங்காலைச்
சாந்தருபத்தனுயசாபாலிமுனியைக்கண்டா
ளாந்திறமவன்பாற்கூறிலடுத்திடுநன்மையென்று
தேர்ந்தவளாகியன்னான்சேவடிவணங்கினாளே. (௩)

வணங்கியபிரேதமாதைமாண்டசாபாலிபார்த்திங்
கிணங்கியநீயார்வந்ததெதுகுறித்துரைத்தியென்று
றுணங்கியவவளுமுன்னர்நடந்தவையொருங்குகூறிப்
பிணங்குமிவ்வடிவநீங்கும்பெற்றிகூறென்றுதாழ்ந்தாள். (௪)

மாமுனிவனுமிரங்கிக்கிருத்திமமாதைநோக்கி
நாமுருவின்னைநீங்கநாடுமாயூரத்தெய்தி
யேமுறுமிடபதீர்த்தத்தினிற்றோய்ந்தாடியோர்முச்
சோமுனிவள்ளலாரைத்தொழுதுபூசித்தியின்னும். (௫)

முழுதுலகீன்றசெல்வியஞ்சனுயகிமுன்சென்று
தொழுதுளமுருகுவாயேற்றொலைந்திடுமன்னைரூபம்
பழுதருவனப்புவாய்ந்தமாணிடமகளாய்ப்பண்பார்
செழுமறைப்பிரமதத்தற்கூடுபுசெறிந்துவாழ்வாய். (௬)

என்றுசாபாலிகூறவறிவிலேனுய்ந்தேனென்று
கன்றுபேய்வடிவமாதுகனிந்தவனடியிற்றாழ்ந்து
நன்றுசால்விடையும்பெற்றுநாடுமாயூரத்தெய்தித்
தொன்றுசாலிடபதீர்த்தத்துறையினையடைந்தாளன்றே. (௭)

துறையகம்படிந்தெழுந்தாடியர்க்குறுங்குருவிந்தா
ணிறைவனப்பமைந்தமங்கையுருவநேர்பெற்றெழுந்தா
ளறைதருமுடிதராதவானந்தமகிழ்ச்சிபெற்று
றுறைபெருந்தவச்சாபாலியுரையினைவியந்தாளன்றே. (௮)

மணிமதில்சூழுங்கோயில்வலம்புரிந்துட்புகுந்து
பணியணிவள்ளலாயபரம்பரன்றனைப்பூசித்துப்
பிணிமுகவுருவநீத்தப்பிறங்குமையவன்முன்சென்று
கணிதமிலன்புபொங்கக்கைகுவித்திறைஞ்சினின்றாள். (௯)

ஆயவக்காலையெங்களஞ்சனுயகியுஞானத்
தூயமெய்ச்சோதியாயசுந்தரவள்ளலாரு
நேயமிக்கருள்செலுத்தநிரம்புமந்நகரில்வாழ்க்கை
பாயநற்பிரமதத்தப்பனவன்கண்டனன்வேட்டாஞல். (கO)

அணையவனோடுங்கூடியளப்பரும்போகந்துய்த்துப்
புணைதருமகவும்பெற்றுப்பொலிதருவள்ளலாரை
யிணைமயிலுருக்கொண்மாதைநித்தலுஞ்சென்றுபோற்றிக்
கணைகடலுலகம்போற்றிக்கைகுவித்திடவாழ்ந்தானே. (கக)

இலக்குமிபூசித்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கககாகா.

## விசாலன் பூசித்தபடலம்.

பங்கமேவியபண்ணைநின்றெழுதருவாளை
சங்கமூர்பெருவானதித்தலைதுளைந்தாடு
மங்கநாடினிதளிப்பவன்மதிக்குலத்தமைந்தோன்
றுங்கமேயமைவிசாலனென்றிடும்பெயர்த்தோன்றல். (க)

ஒருவன்வையகம்புரக்குநாளெண்ணிறந்தமைந்த
திருவனுகியமுகுந்தனன்புடையர்போற்றிரியும்
வெருவராவயிணவமறையவர்சிலர்மேவிப்
பருவராவவற்குண்மையினிதுவிதுபகர்வார். (உ)

சமையமாவதுவயிணவசமயமேதகவி
னமையமேவியதெய்வமுமருட்டிருமாலே
சமையயாவையுந்தருபவராவனடிசார்ந்தார்
கமையவாவியமனத்தினுய்தெரிதரக்காண்டி. (ங)

அருமையாகியவயிணவசமையத்தையடைந்து
பெருமையாகியதிருநெடுமாலடிபேணி
யொருமையாகியவவனடியார்களையூட்டிக்
கருமையாகியபிரபஞ்சவாழ்க்கையைக்கடந்து. (ச)

முந்திமெய்திரியோங்கலைகெழுவிரசையின்மூழ்கித்
தந்திகாத்தவன்வைகுந்தத்திருநகர்சார்ந்து
நந்தியார்திருமாமணிமண்டபநணியவ்
வுந்திபூத்தவனுருவம்பெற்றமர்தலேயுண்மை. (ரு)

மறைபுகன்றிடலிதுவலான்மற்றுமொன்றுண்டோ
விறையுமற்றொருதெய்வத்தையுன்னுதலிழிபே
முறையின்மற்றொருகருமத்துமுயறலுமனிவே
தறைபுராப்பவனிணையன்றியெவருணர்தகையோர். (சா)

என்றுபாஞ்சராத்திரமெடுத்தியம்பினரிறைவ
னன்றுநல்கியபொருளொடும்வயிணவாகன்றூர்
நன்றுநீங்கியவிசாலனுமமைச்சர்முன்னல்லோ
ரொன்றுமார்க்கமிதன்றெனவுளப்பதுங்கொள்ளான். (எ)

ஓங்குவைணவசமயமேசமயமற்றதற்குப்
பாங்குமேவியதெய்வமாம்படியளந்தவனே
வீங்குதெய்வமற்றவனடிக்கன்பரோமேலோர்
தேங்குமிவ்வலால்வேறிலையென்றுளந்தெளிந்தார். (௮)

நீறுகண்மணிபூண்பவரொடிகுறநேரிற்
சீறுபாம்பினும்வெய்தெனச்சீறுபுசினப்பா
னூறுகூடிதனுலையுங்கணுக்கிடரமைப்பான்
மாறுகொண்டவத்தீயவன்செயலெவர்வகுப்பார். (௯)

சிவாவெனச்சொலிற்சிக்கெனச்செவித்துளைபுதைப்பான்
றவாமகிழ்ச்சியின்வைணவரடித்தலஞ்சார்வா
னவாவிமற்றவர்க்கோதனமினிமையினமைப்பா
னுவாமதிக்கடலெனவவர்க்கூட்டிமிக்கொலிப்பான். (௧௦)

மறையுரைத்திடுகருமங்களனைத்தையுமறுத்துப்
பொறைமுதற்குணமொன்றிலையாம்படிபோக்கி
நிறைதவத்தினர்க்கூறிழைத்துழிதந்துவிரயச்
சிறையிருப்பவரொருதினம்பிணிதெறச்செத்தான். (௧௧)

வெய்யதூதுவர்கொடுவலிப்பாசத்தால்வீக்கி
வையமஞ்சுறமாற்கதண்டங்களுமியற்றிச்
செய்யகோனுடைக்கடவுண்முற்செலுத்தினராகக்
கையவந்தனையோவெனக்கனன்றுகூற்றுவனும். (௧௨)

வல்லசித்திரகுத்தரைப்பார்த்திவன்வையத்
நல்லசெய்தனவுரைக்கெனவனைத்துமாய்வுரைப்பக்
கொல்லமுந்தெழுவிடத்தினுங்கொடிகொடித்துமுன்று
சொல்லவும்படாக்கொடுந்தண்டம்புரிகெனச்சொற்றான். (௧௩)

சொற்றபோதுபல்லோர்புலிப்போத்தெனச்சூழ்ந்து
செற்றமேவுவைவாள்கைக்கொண்டுறுப்பறச்சிதைப்பார்
வெற்றவல்லிரும்புலக்கையின்வெய்தெனப்புடைப்பார்
ஊற்றவெந்தழற்கொதிநிறைநெய்யினுட்டோய்ப்பார். (௧௪)

நுங்குகுன்றெனக்கண்களைச்சூலுவர்துறுக்கிடப்
பொங்குநெய்நிறைசாடியிற்போகட்டுவெதுப்பார்
தங்குமீயத்தையுருக்கிவாய்வழிவிட்டுத்தடிவார்
மங்குமாறுபல்கொடுமையுங்கதறிடவகுப்பார். (௧௫)

இந்தவாறுபஃறண்டங்களெண்ணிறுளாற்றிப்
பந்தமாமிரவுரவமுற்பற்பலநரகு
நந்தவாருரெண்ணிலாநாளெலாந்துளைந்தான்
பிந்தவன்றொருவிந்தத்திற்பேயுருப்பெற்றான். (௧௬)

விந்தமால்வரைப்பேயெனப்பிறந்துழல்வெய்யோன்
சந்தநீர்நிழல்வயிரவாரணையிற்சாரா
னந்தவெம்பசிதாகமுநலிந்துழிதருவான்
கந்தமாமலர்ப்பொழில்சலாமலயத்தைக்கண்டான். (௧௭)

## விசாலன்பூசித்தபடலம்.

ஆங்குமேவியகும்பமாமுனிவனையடுத்தான்
பாங்குமேவுமற்றவன்றிருவடிமிசைப்பணிந்தான்
றேங்குதன்பெருந்தீவினையாவையுஞ்செப்பி
நீங்குமாறினிதருளெனநிகழ்த்தினனழுதான். (௧௮)

ஆயகாலையிற்சிவத்துரோகம்புரிந்தடுத்த
தீயநின்முகங்கண்டலுந்தீமையாய்முடியும்
பாயபற்பலநரகழுந்தினும்பாரு
வேயமற்றிதற்கெவர்கழுவாயெடுத்திசைப்பார். (௧௯)

அன்னதாயினுமடுத்திரந்தனையொருகழுவாய்
நன்னரோதுதுங்கேட்டியான்மறத்தொழினயந்தோய்
முன்னர்நாள்வடதிசைக்கிறைமானிகைமுயங்குந்
சொன்னநேர்குணச்சுசிரவாவென்றுங்கந்தருவன். (௨௦)

பெற்றபுத்திரிமனோக்ஞியெனும்பெயர்பெற்றாள்
வெற்றபல்வகைத்தேயத்தும்விளைநலங்காண்பா
ளுற்றகாயமார்க்கந்தனிலியங்குபுவருவா
ளற்றமொன்றிலாவிந்துவாவிக்குநேரடைந்தாள். (௨௧)

மிருவனங்கொள்கஞ்சாற்றெருவிந்துவாவியின்பா
னருந்தவம்புரியுருசிமாமுனிவனன்மைந்தன்.
றருகுணத்தினன்மித்திரனெனும்பெயர்சார்ந்தான்
ஒருகுபுகழ்ச்சிசால்பிரமசாரிப்பெருந்தூயோன். (௨௨)

ஆங்குமெய்த்தவமாற்றினனிருந்தனனுக
வீங்குமென்முலைமனோக்ஞியவனலம்விழைந்து
தேங்குகாமவேள்பெய்கணையானிறைநிறைந்து
தாங்குமண்மிசைவந்தவன்முன்னின்றுசாற்றும். (௨௩)

கந்தவேளினுங்கட்டழகுடையவவென்னைச்
சந்தமார்மணம்புரிந்தினமுலைதழுவென்ன
நந்தமாரியளருள்வழிநடாத்துதுமென்று
னெந்தநாளதுபெறுவதென்றவளுளத்தெண்ணி. (௨௪)

இருகைகொண்டுதனிளமுலைகுழைதரத்தழுவித்
திருகையில்லைபவளவாய்ச்சுவைத்தலுஞ்செய்தா
ளொருகையாற்பழித்தப்புறத்தவள்செலவொதுக்கி
முருகைநேர்பெருவனப்பினன்சினத்திதுமொழிவான். (௨௫)

பிரமசாரியாய்த்தவஞ்செயுமென்னைநீபிணைந்து
பிரமமின்றியவிந்துசெய்தாயிழிந்தனிர்கேடி
பிரமயிக்கதோர்பேயுருவாகெனச்செப்பிப்
பரமநாயகனருள்குறித்திருந்தனன்பனவன். (௨௬)

ஆயவேலையிற்பேயுருவடைந்தனளனங்கு
ஆயவத்தடந்தோய்தரத்தூத்தவவுரித
னையமோடனைதரக்கண்டுநேரிழைபணிந்து
தீயவிவ்வுருத்தீர்தரவருளெனச்செப்ப. (௨௭)

அன்னமாதவவசிதனுமிரங்கிமாயூர
மென்னவோதுமாத்தலத்தினின்னேவிரைந்தடைந்து
நன்னர்சாலிடபப்புனன்மூழ்கெனநவிலச்
சொன்னபோதுவந்தாடினுண்மனேக்கினித்தோகை. (௨௮)

ஆடிப்பேயுருவகன்றுமுன்னுருவமேயடைந்தா
ணுடிச்சென்றுமாயூரநாயகனடிபோற்றிப்
பாடித்தேவர்சூழஞ்சனுயகியையும்பணிந்து
கூடிப்போயொருமித்திரன்முனங்குறுகினளால். (௨௯)

அந்தவேலையிலசிதனுமுருசியுமணைந்து
சந்தமாருமித்திரற்கவடனைமணம்புணர்த்தார்
பந்தமோடுவீடுதவிடும்பரமனுரருளான்
முந்தவாம்பெரும்போகத்துமுயங்கிவாழ்ந்திருந்தாள். (௩௦)

உற்றதீவினையால்வைணவத்தொடக்குண்டு
சொற்றபல்கொடுநரகெலாந்துளைத்தபேய்விசால
கற்றமேலவர்புகழுமத்தீர்த்தத்தைக்கலந்து
முற்றமூழ்குநம்பிரானையேத்துதியெனமொழிந்தான். (௩௧)

கும்பமாமுனியருளியமொழிதலைக்கொண்டே
யம்பராவணிசடையர்மாயூரத்தையடைந்தான்
வெம்பமேவுபாதகமெலாமொடிவரைவீட்டிக்
கம்பமேவுறப்புரியிடபப்புனல்கலந்தான். (௩௨)

ஆடினுன்கொடும்பேயுருவங்கனேயொழிந்தான்
கூடினுன்பெருங்களியிமையவருருக்கொண்டா
னுடிநான்முகன்போற்றியவள்ளலையடைந்து
பாடினுன்பெருங்கோயில்புக்கவன்பதம்பணிந்தான். (௩௩)

அஞ்சனுயகிபூசையுமன்புறச்செய்தா
னெஞ்சலின்றியாங்கிங்ஙனஞ்சிலபகலிருந்து
வஞ்சர்பாலுருவள்ளலார்திருவருள்வாங்கித்
தஞ்சமார்சிவலோகத்துச்சார்ந்துவாழ்ந்திருந்தான். (௩௪)

அங்கநாடுகாத்தவன்பட்டபாடுமுற்றறிந்தும்
பங்கமார்வினையாற்சிவநிந்தைபண்ணிடுவார்
பொங்கனேகவெந்நிரயமும்புகுந்துழன்றிழிக
வெங்கள்செய்கைமற்றவன்புகழிசைத்துவாழ்ந்திருக்கை. (௩௫)

விசாலன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௧௨௦௧.

# யாவணமுத்தியடைந்தபடலம்.

மகதியாழ்முனிவன்றும்புருவொடு, திகரிலாவிமயப்பெயர்நீள்வரை
யகரிலாவுமஞ்சாரலணைந்தன, ஞகலிலாவெறுழோர்கரிகண்டதே, (௧)

கண்டகாலைமுற்சன்மங்கருத்துணர்ந், தண்டர்போற்றுமவன்கழற்றாழ்ந்தது
விண்டபாசமுனிவனும்வேழநீ, கொண்டவெண்ணமென்கூறுகதில்லென்றான். ()

முனிவகேண்மதிமுற்சனனத்தியான், புனிதனாயபிராமணபுத்திரன்
றனியனாமமாசாந்தனென்றோதுவா, ரினியமால்பதம்பூசித்திருந்தனன். (௩)

ஆயகாலையகத்தியராதிய, நேயமாமெழுவோருநிறைபெருந்
தூயமாகயிலாயந்தொழச்சென்றார், காயவாறவர்க்கண்டும்வணங்கிலேன். (௪)

இருக்கைநின்றுமெழேனவர்கண்டிவன், செருக்கமைந்தவனென்றுசினந்தனர்
பொருக்கெனவெம்புகர்முகமாகென்றார், வெருக்கொளாவவர்தாண்மிசைவீழ்ந்த
[னன். (௫)

அடியனேனறியாமையினாற்றிய, கொடியதீமைகொள்ளாமலிதற்கொரு
முடிபுசொன்மின்முனிவரர்காளென்றே, னொடிவின்மற்றவருள்ளமிரங்கியே. ()

ஆண்டுநூறிபமாகியமருதி, யீண்டுநாரதமாமுனியெய்திடும்
பூண்டுமற்றவன்பொன்னடித்தாமரை,வேண்டுவாயெனிற்றீர்வுவிளம்புவான். (௭)

என்றுகூறியெழுவருமேகினா, ரன்றுதொட்டிபமாகியலைந்தனன்
சென்றுநூறுவருடமுந்தீர்ந்தன, நன்றுதீர்வுனையென்றுநவின்றதால். (௮)

கேட்டநாரதன்கேழ்கிளர்பைந்துழாய்த், தோட்டலங்கலந்தோளரிபூசையா
னாட்டமூன்றுடைநாதனடியவர், நாட்டவிர்க்குவணங்கறவிர்ந்தனை. (௯)

அன்னதீமையினாலிபமாயினை, யென்னரோனுமிறைவனடியரை
நன்னரோத்திவணங்கினலமுறும், பின்னரொன்றிடிற்பீழைபெருகுமே. (௧௦)

அட்டமூர்த்தியடியர்வணக்கநீத், தொட்டமாலயனாதியவும்பர்கள்
பட்டபாடுபகரவொண்ணாதெனின், மூட்டநின்னைமொழியவும்வேண்டுமோ. ()

என்றுமேலவர்தன்மையியம்பிமே, லொன்றுகூறுவனாண்டுமாயூரத்தா
னன்றுசார்ந்திடபப்புனலாடிமூழ், கன்றுமிவ்வுருத்தீருமதற்குமேல். (௧௨)

பண்டைநல்லுருவெய்தும்பலருந்தாழ், கண்டைமால்விடையான்கழல்போற்றிடி
னிண்டையானுநறுமுறுப்பெய்திட, வொண்டைவான்சிவலோகமுறுவையால். ()

போதியென்றுபுகன்றனனாரத, னீதியென்றுநினைந்துமதகய
மாதிநாதன்மாயூரமடைந்துதோ, மோதியாளிடபப்புனன்மூழ்கிற்றே. (௧௪)

முழுகுங்காலையின்முன்னுருப்பெற்றதாங், கொழுகுதானவுருவமறைந்தது
பழுதுதீர்ந்ததென்றெண்ணிப்பரமனைத், தொழுதுய்வாமெனவாலயஞ்சூழ்ந்ததே.

அஞ்சனாயகியாரொடும்வள்ளலை, யெஞ்சலின்றியியைதரப்பூசித்துத்
தஞ்சமார்சிவலோகத்திற்சார்ந்தது, வஞ்சமில்லாமகிழ்ச்சியின்வைகிற்றே. (௧௫)

யானைமுக்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௧௨௭.

# குதிரைகண்முத்தியடைந்தபடலம்.

மன்னுமயோத்திநகராளுமனுவங்கிசத்துத்திலீபன்பா
லுன்னும்பரிகளிரண்டுள்ளவுடம்புமுழுதும்விளர்த்திருக்கத்
துன்னுஞ்செவிகண்மாத்திரமேகறுத்துத்தோன்றப்பொலிவனவான்
மின்னுமனையபாடலத்தான்வென்றுன்றிசையோரெட்டுமவன். (க)

அன்னதுரகமொன்றற்கொன்றவாவியொருநாளிதுபேசு
முன்னமரசாளிவன்மார்பின்முந்நூன்மறையோனாயிருந்தா
னன்னர்யானுமொருவணிகனாகியமர்ந்தேனயந்தவன்பாற்
சொன்னமிகவுங்கடனாகக்கொண்டேன்கொடுத்துத்தொலைத்திலேன். (உ)

அந்தவினையாற்றசமகிடமாகியவற்கிப்பவத்துழைத்தேன்
பந்தமொழியாதிருப்பதனாற்பரியாயுழைத்தும்வருகின்றே
னெந்தநாண்மற்றிதற்கொருதீர்வெய்துமென்றுசொலியழுத
தந்தவொன்றுமற்றொன்றுங்குளையாநிற்குந்தன்சரிதம். (ங)

முன்னமொருசூத்திரன்யானுமுந்நூன்மறையோனுமிவன்பாற்
பன்னவரியகடன்கொண்டேன்பாதிகொடுத்துந்தொலைத்திலே
னன்னபிழையாற்கயமொருபானாகியுழைத்தேன்பரியாயு
மின்னமுழைத்துவருகின்றேனென்றுசொல்லியழுததே. (ச)

தொள்ளையகன்றமனத்திறையெவ்வுயிர்ப்பாடையுந்தேர்துணிபினாற்
கிள்ளையிரண்டுமொன்றற்கொன்றுரைத்தவார்த்தைகேட்டிரங்கித்
தள்ளையனையகுருவசிட்டன்றாள்கள்வணங்கித்தெரிவித்தான்
வெள்ளையமையாப்பெருங்கேள்விமேலோனவனுமிஃதுரைப்பான். (ரு)

மன்னுவெவைக்குமிரணவிமோசனஞ்செயறமேமாண்டதா
மின்னுவொழியப்பரியிரண்டுமின்னேதிருமாயூரத்தைத்
துன்னுமிடபதீர்த்தத்தின்முழுகிற்றொலையுந்துணிபிதுவே
யுன்னுவிதுசெய்திடுதிறனுமுனக்கேயமையுமென்றுரைத்தான். (சா)

என்றபொழுதேபரியிரண்டுங்கைக்கொண்டெழுந்துமாயூரத்
தொன்றவடைந்தான்புகழிடபத்துறகத்திரண்டனையுநனைத்தான்
மன்றவெவருமதிசயிப்பவாசியுருவமதுமாறி
நன்றமையுந்தேவுருவாகநரேந்திரனுங்கண்டுளமகிழ்ந்தான். (எ)

நற்றேவுருவங்கொண்டபரிநக்கதிருக்கோயிலையடைந்து
முற்றேதழும்விண்டொழிதரநான்முகன்மான்முதலோர்க்கரியானைப்
பற்றேதுமிலார்பெருவாழ்வைப்பாகப்பிராட்டியொடும்போற்றி
யெற்றேமலர்வானவர்பொழியச்சிவலோகஞ்சார்ந்திருந்தனவே. (அ)

மாறுவிரணமோசனஞ்செய்மாண்பார்தீர்த்தப்பெருஞ்சிறப்பும்
பேறுவுயர்ந்தசிவலோகம்பேணிக்கொடுத்தார்பெருஞ்சிறப்புந்
தேறுவுளத்துமகிழ்வுற்றுத்திலீபனயோத்திநகரடைந்து
கூறுவசிட்டமுனிவனுக்குக்குறித்துமகிழ்ந்துவாழ்ந்திருந்தான். (கூ)

குதிரைகண்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஉஉகா.

# கரமுங்கழுகுமுத்திபெற்றபடலம்.

மாயிடமதியென்னும்வளநகரரசாள்வோன்
றோயிடர்தபுசிங்கத்துவசனெனும்பெயரான்
காயிடர்புரிமிருகங்களுலியகானடைந்து
தாயிடவரிதாகவடுதொழிற்றலைநின்றான். (௧)

சிங்கமுங்கடமாவுஞ்செறியுளியமும்வெம்மா
தங்கமும்வல்லியமுமுதலியதபச்சாடிப்
பங்கமொன்றில்லாதபரத்துவனுச்சிரம
மங்கரும்வெயின்முதிரவந்தனன்மிகவிளைத்து. (௨)

புரவலன்வருபோதுபொக்கமின்மாமுனிவன்
பரசிவனடியுன்னிப்பண்புறயோகிருந்தான்
விரவியமறமன்னனும்வரும்வேளையிடை
யுரவொடுகண்மூடியிருப்பதென்னுவனென்று. (௩)

மிகுசினமதுகொண்டுவேந்தர்களிளைத்துவரிற்
றகுமுகமன்புரியாய்தனியிருப்பதுநன்றோ
செகுதிறற்செறுநர்களுஞ்செய்திலரிஃதென்று
நகுபுகழொழிவான்றனெடுத்துதைத்தனனடுங்கான். (௪)

உதைத்தலுமுனிவன்விழித்துறுசினந்தலைக்கொண்டு
பதைத்தனனெதிர்நிற்கும்பாதகன்முகநோக்கிச்
சிதைத்தனைநினக்குரியதிருமுழுமையுமின்னே
வதைத்திடுமிழிகழுதையாகெனவைதனே. (௫)

வேறு.

ஓங்குமுனிசபித்திடலுமொருகழுதையுருக்கொண்டு
வீங்குபெருங்குரல்காட்டிவிழியெதிர்கண்டவர்பலருந்
தாங்குகதைகொடுமொத்தவெரீஇயுடைந்துதனையுழன்றான்
பாங்குபெறுமவன்சுற்றத்தவர்பலருமதுகண்டார். (௬)

கண்டபொழுதினிச்செய்யக்கடவதெவனெனக்கழிந்து
வண்டடையுமலர்மாலைமணிமகுடமவனீன்ற
திண்டிறன்மைந்தனைச்சூட்டித்திரையாழிப்புவிகாத்தார்
மண்டிரியக்கழுதையும்பல்லிடந்தோறுமரீஇயலைந்து. (௭)

ஒருகஞ்சுகாரணிடைத்துற்றதவனதைப்பிடித்துப்
பருவந்துவெரீஇயுடையப்பாத்திரத்திண்சுமையேற்றி
மருவந்தமாதியிலாமாதேவன்விழாநடக்குந்
திருவந்தநகரமெலாஞ்செல்லுவானதுபோல. (௮)

வயங்குபுகழ்மாயூரத்தைப்பசிவான்றிருநாட்கு
முயங்குபலசரக்கமைத்தமூடைவெரிநிறச்சுமத்தி
யியங்குகழுதையைநடத்தியடைந்தொருசாரிறக்கினான்
தியங்குகழுதையும்புழுதிசெறிதரவீழ்ந்ததையன்றே. (௯)

வீழ்ந்தவிழிகழுதையிடம்வெய்யவாய்க்கழுகொன்று
சூழ்ந்தமனக்கவலையொடுந்தோன்றிநீயாரென்ன
வாழ்ந்ததுயர்க்கழுதையுந்தன்வரவமையவெடுத்தோதித்
தாழ்ந்தபிறப்புழனீயார்சாற்றிடுதியெனக்கென்ன. (௰)

என்றலுந்தூமரனெனும்பேரியைந்தவொருகிராதன்யான்
கன்றலிலாவிந்தவனைக்கானகத்துக்குடியிருந்தே
னென்றவவண்வருவாரையுயிரோடுபொருள்கவர்ந்து
நன்றமையாவயிரேம்பினாய்க்குலத்துங்கடையானேன். (௧௧)

அன்னநாள்களிலொருநாளாங்கடையுமகத்தியனை
மன்னநான்வழிபட்டேன்மற்றந்தப்புண்ணியத்தான்
முன்னம்யாதுறநிகழ்ந்ததஃதுணருமுணர்ச்சி
துன்னயான்வசித்திடுவேன்சுகமாயதஃதொன்றே. (௧௨)

பலனைவழிப்பறித்தடர்த்தபாவத்தாற்பன்னெடுநா
ளுலர்தலிலாக்கொடுநரகத்துழன்றொருவையுருவடைந்தேன்
புலர்தலிலாவிவ்வுருவும்போக்கியுயர்தருபாக்கு
மலர்தலைஞாலத்துள்ளதீர்த்தமெலாமரீஇப்படிந்தேன். (௧௩)

எங்குமிதுதீர்ந்ததிலையித்தலமாத்தலமென்பார்
பொங்குமிதிற்பொலியிடபப்புண்ணியதீர்த்தத்தடைந்து
மூங்குவமென்றடைந்தனன்யானீயும்வாமுழுருவமேற்
சிங்குதலில்வினையனைத்துந்திருமெனச்செப்பியதே. (௧௪)

கழுகுரைத்தமொழிகொண்டுகரமுமதன்பின்றொடர்ந்து
முழுகியதுசிறைக்கழுகுமுழுகியதுமுனிதக்க
பழுதுருவமிரண்டுமொரீஇப்பரவுதேவுருவடைந்து
செழுமலர்கைக்கொடுவள்ளல்சேவடிகளருச்சித்து. (௧௫)

மன்னியபேரருளஞ்சனுயகிதன்மலர்ப்பதமுந்
துன்னியவன்பொடுவழுத்திச்சுரகணங்களெதிர்கொள்ள
மின்னியபொன்விமானத்துமேற்கொண்டுவானுலகு
முன்னியபோகங்கவர்ந்துமுனிவின்றியிருந்தனவே. (௧௬)

கரமுங்கழுகும் பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௧௨௬௨.

# பாம்புமுத்தியடைந்தபடலம்.

பெருமதிலிந்திரப்பிரத்தம்புக்கொரு
தருமனன்மகந்தெரிந்தனையன்றன்னொடும்
வெருவருங்கானிடைவேட்டமாடுவான்
பொருவரும்யதுகுலக்கண்ணன்புக்கனன். (௧)

உறுமவண்மாசுணமொன்றுகண்டனன்
றெறுதொழிலிதுவுமோர்சிலம்புகொல்லென
மறுவறுமனத்திடைமதித்துளானசை
வறுகிடையதன்வரவறியலாமென. (௨)

பாவகீயிவ்வணம்படிக்கிடந்தனை
தேவனேவவுணனேசெப்புவாயென்றுன்
மேவரும்வரையெனக்கிடந்துவெந்துய
ரோவறுமாசுணமுரைக்கலுற்றதே. (௩)

நகுகதிரவன்குலநகுடன்யான்முனை
மிகுதிறலுடைமையின்வேட்கைகூர்தரச்
செகுபரிமகமொருநூறுசெய்தனன்
ஞெகுசுடர்வானகந்துதையவெய்தினேன். (௫)

முழுவலியிந்திரபதமுயங்கியான்
செழுநலச்சசிமுலைதிளைத்தல்வேட்டன
னெழுவருஞ்சிவிகைவைத்தியையத்தாங்கினார்
தழுவுறும்வேட்கையாற்சர்ப்பவென்றனன். (௬)

குறுமுனியெமையுணர்கொள்கையற்றவெந்
தறுகண்மையுளங்கொடுசர்ப்பவென்றனை
யறுதிருவுற்றுநீசர்ப்பமாகென்றான்
மறுகியிவ்வுருக்கொடுமண்ணில்வீழ்ந்தனன். (௭)

அன்றுதொட்டின்றளவசைவிலாதிவ
ணின்றினனுறுதுயரொழிவுகண்டிலே
னன்றுநீவந்தனைநன்மையாவதி
தென்றெருதீர்வுசொற்றிடுதியென்றதே. (௮)

கண்ணனுமுளத்திடைக்கருதியைம்முகத்
தண்ணன்மாயூரத்தையடைந்தியாவரு
மெண்ணுமோரிடபதீர்த்தம்படிந்திடிற்
றுண்ணெனுமிவ்வுருத்தொலையுமென்றனன். (௯)

பெயர்வறக்கிடக்கும்யான்பிறங்குமத்தலத்
தயர்வுதீர்த்திடும்படியடைவதெப்படி
யுயர்புளாய்சற்றுணர்ந்துரைத்தியாலெனச்
சயமிகுமவனிதுசமையச்செய்தனன். (௧௦)

வள்ளலைவணங்கியிம்மாசுணத்துரு
விள்ளவுபுறவருள்விளைத்தியென்றுதீங்
கள்ளலைமலரொருகரத்தெடுத்தன
னெள்ளலிலாதவனெறிந்திட்டானரோ. (௧௧)

எறிதலுமிடபதீர்த்தத்துவீழ்ந்ததா
செறிதருபாப்புருச்சிதையத்தேவுரு
வறிதரப்பெற்றதாங்கஞ்சனுயகி
பறிபுனைசெஞ்சடைப்பரனைப்போற்றிற்றே. (௧௨)

போற்றுபுவிமானமேற்பொலிந்துவானவர்
தூற்றுபன்மலரொடுஞ்சுவர்க்கம்புக்கது
கிற்றுவெண்பிறைச்சடைக்கேடிலானுக்கண்
பூற்றுளத்துறவவணுறைந்துவாழ்ந்ததே. (௧௩)

பாம்புமுத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம், ௧௨௫௪.

# நரியுங்குரங்குமுத்திபெற்றபடலம்.

அணிகுலாம்வந்தியிற், றணிவிலாதருத்திரர்
நணிவிடாதநண்பினுற், றுணிபுவாய்ந்தவிருவரோ. (௧)

இருவரும்பன்னாள்செல, மருவுநண்பின்வாழ்ந்தனர்
வெருவமைந்தவூழினாற், றருமனூரடைந்தனர். (௨)

ஒருவனுற்றவிருவரு, ளொருவின்மண்ணிடைப்பின
ரொருவனிகலனாயினா, னொருவன்கபியனாயினான். (௩)

ஆயும்வானரமுங்கோ, மாயுவுஞ்சின்னாள்செலத்
தோயுமோரிடத்திடை, யேயுமாறுகூடின. (௪)

கொம்பில்வாழும்வானரம், வெம்புபாவம்யாதுசெய்
திம்பரீதற்றுயெனச், சம்புவைவினாயிற்றே. (௫)

மறையவர்தமக்குப்பொ, னிறைதரக்கொடுத்துமென்
றிறையுமீதராமையா, லுறையுமிவ்வுருப்பெற்றேன். (௬)

பெற்றதன்றியும்பினை, முற்றவுண்டுழல்கின்றே
னுற்றநீயிவ்வுருவுறுங், குற்றம்யாதுகூறென. (௭)

பரதிரவியங்கவர்ந், தரவுமேவவாழ்ந்தனன்
விரவுமந்தவினையின்வா, னரவுருவநண்ணினேன். (௮)

என்றிரண்டும்பேசுபு, கன்றிநையுங்காலையி
லொன்றவற்றினன்மைபோ, லன்றுகாசிபமுனி. (௯)

ஆங்குமேவினானளந், தேங்குதுன்புந்தீதினான்
னீங்குமுங்கள்வினைகெட, வீங்குவம்மினென்றனன். (௧௰)

முனிவன்பின்னரிகலனுங், கனியவாவுகபியனு
மினியதாகவெய்தின, தனியமர்மாயூரமே. (௧௧)

இடபதீர்த்தப்பாலடைந், துடர்தரும்வினையெலாந்
தொடர்புதீரமுழுகுமென், றடனுரைத்தனனரோ. (௧௨)

சொற்றவாறுமூழ்கின, வுற்றவிமையோப்பின
பெற்றதேவுருவொடு, மற்றந்தீர்ந்தெழுந்தன. (௧௩)

முனிவனைப்புகழ்ந்தன, தனியனாயதம்பிரா
னினியவஞ்சனாயகி, பனிமலர்ப்பதந்தொழா. (௧௪)

மானமீதமர்ந்தொரு, தானமேவியாவரு
மானசெய்தமைத்திட, வூனமின்றிவாழ்ந்தன. (௧௫)

நரியுங்குரங்குமுத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௨௱௩௰.

# கங்கைமுத்தியடைந்தபடலம்.

வருதிருமேதனென்றுமாண்பருச்சேபனென்று
மிருமுனிவரர்முன்புள்ளாரோத்துநல்லொழுக்கமிக்கார்
பொருவருமனையார்தீர்த்தமெவற்றுள்ளரும்புக்குமூழ்க
மருவுமோர்விருப்பங்கொண்டார்மற்றெழுந்தனரக்காலை. (௧)

மன்னுமாயூரமேவிமாதேவவள்ளலாரைத்
துன்னுமற்றவர்பான்மேயதோகைமாமயிலைப்போற்றி
முன்னுநல்விடபதீர்த்தமுழுகலையமையுமென்று
பன்னுமாகாயவாக்கொன்றெழுந்ததப்பனவர்கேட்க. (௨)

அதுதெரிந்தனையருள்ளத்துளகிலாமகிழ்ச்சியெய்திக்
கதுமெனமாயூரத்தைக்கலந்திடும்விருப்பமேவிச்
சதுமுகன்றொழுதவந்தத்தானஞ்சேர்நடைவதேர்ந்து
முதுக்கலமெழவெழுந்துநடந்தனர்கோதொன்றில்லார், (௩)

வழிவருகாலையாங்கோர்வன்கண்வெங்குணுங்குநேர்வந்
தழிதராவவளைப்பற்றியுண்பதற்கடர்த்ததாக
வழிதராவனையர்நோக்கியழன்றனருங்காரஞ்செய்
தொழிதரப்புரிந்தாரப்பேய்க்குறித்ததோரதிவாங்கம்மா. (௪)

அறிவுறத்துடிப்பவப்பேயன்னவரடியிற்சூழ்ந்து
செறியுமென்வரலாறெல்லாஞ்செப்பிடக்கிளர்கேண்மின்
முறிவில்வேதியர்குலத்துமுளைத்தேன்கங்கையென்னும்
பிறிவிலோர்பேரும்பெற்றேன்பிதாவெனையேழாண்டெல்லை. (௫)

ஒருமறையவற்குத்தானமுதவினன்பத்தாண்டெல்லைப்
பொருவறுமதுக்குறைந்தேன்பொலிதருபன்னீராண்டில்
வெருவாக்கொழுநன்வீந்தான்விதவையாய்க்கழித்தயான்மற்
றொருவருடம்படேயன்செம்பொன்றேடிமாருசைவைத்தேன். (௬)

அடைபவர்யாவரோடுமைவரிழிபுயர்பெண்ணுமன்
யிடைதருசெம்பொன்வாங்கிவிழைதருமன்னமீவை
னுடைபயல்லார்மேவிக்குருபிடிசோறுமீயேன்
கடைபடவிந்தவாறேயீட்டினேன்கனகமேன்மேல். (௭)

ஈட்டியமதற்கிலுக்கோட்டுனையேனுமீயேன்
கட்டிவைத்தெண்பதாண்டிற்குலைகுலைந்திறந்துமாண்டேன்
பூட்டியபாதகத்தாற்புலைசெய்பேயுடம்புபெற்றே
னுட்டியதனத்திரும்மானல்லறிவுதித்தல்வாய்த்தேன். (௮)

இனியிதுகழிதருந்திர்வியம்பிடவேண்டுமென்ன
முனிவருமிரக்கமெய்திமுயன்றெம்மோடணைதியென்னக்
கனிதருமன்பினோடுதொடர்ந்ததுகடியபேயு
நனிவியந்தவருஞ்சென்றுநாடுமாயூரம்புக்கார், (௯)

இடபதீர்த்தத்துமூழ்கென்றியம்பவுமூழ்கிற்றப்பேய்
மடமைசெய்பேயுடம்புமாறித்தேவுடம்புபெற்று
விடவரிதாரும்வள்ளன்மென்மலரடிகள்போற்றிக்
கடனமர்தெய்வலோகங்காணிகொண்டமர்ந்ததன்றே. (௧௦)

இருமுனிவரருநோக்கியிறும்பூதுமிகவுங்கொண்டார்
மருமலர்க்குழலாள்பாகவள்ளலாருள்வியந்தே
பொருவருமக்கீராடிப்புண்ணியப்பிரானைப்பன்று
ளருவருப்படையாவன்பினருச்சித்துய்ங்கமர்ந்தாரன்றே. (௧௧)

பலபகலருச்சித்தேத்தும்படிமையர்வள்ளற்பெம்மா
னலமிகுகருணையஞ்சுருயகியிவர்தாஞ்செய்யு
நிலவுபேரருளினாலேநின்மலைமுத்தியுற்றுக்
குலவுமானந்தவாழ்க்கைகூடிவீற்றிருந்தாரன்றே. (௧௨)

கங்கைமுத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம். ௧௨௮௧.

# பூவையுங்கிளியுமுத்தியடைந்தபடலம்.

பெருக்குமந்தாகினிப்பாற்பெருந்தவப்பரத்துவாச
னிருக்குமாச்சிரமமொன்றுவண்டினமுழுமதுவைக்குறக்
செருக்குவெங்கதிரோன்வெப்பமுழுமையுந்திருமாறு
முருக்குமந்தளிர்ப்பூஞ்சோலைமொய்த்துளதங்கணம்மா. (௧)

பறவைகள்பல்லவாழும்பயிறருமவற்றினுள்ளு
முறையிளிரழகுவாய்ந்தவொப்பிலாக்கிள்ளையொன்று
பெறலருங்கனிகள்கோதிப்பேட்டொடுமின்பந்துய்த்தாங்
கறவுமுஞ்சோபமேவியயர்ச்சியினுறங்கிற்றன்றே. (௨)

உறங்கிடுமமையநோக்கியொருகரும்பூனைவந்து
மறங்கிளர்திறத்திற்பற்றவாய்வெரீஇக்குழறியந்நக்
கிறப்கிளரிணையகிள்ளைவெருவினைக்கேட்டேசோக்கிப்
பிறங்குமற்றுணைக்கிளியானொன்னலர்பிழைசெய்ததுன்னனுவின்றால். (௩)

மன்னனும்பிழையிலாமைவருந்திடக்கொடியோர்க்காணித்
பன்னருந்தண்டஞ்செய்வான்பதிபிழையென்னுஞ்செய்யா
வென்னமையியுகீர்த்துமியாதுசெயவொருமமாமோ
முன்னர்மின்பிறப்புத்தேர்வேன்மொழிவனென்றறைந்ததன்றே. (௪)

கிளியிதுபகறலோடுங்கேடுசூழ்மார்ச்சாலத்தித்
களிசிறிதரும்பிற்குசுவைஞ்சிறைக்கிள்ளாய்நீயென்
ஞெளிகிளர்முன்னைத்தோற்றமுணர்ந்ததுமெய்யேயென்னி
லிளிதகவுயர்பிரண்டுமியம்பெனவியம்புமன்றே. (௫)

பெருவளவிதர்ப்பநாட்டிற்* பிருகத்திரதப்பேர்வாய்ந்த
மருவியமன்னனீயான்மனுநெறிதவறின்றுட்
டொருவறவாழ்வாருள்ளமுலைதாபிக்கலைத்தாய்
பருவரலனேகஞ்செய்தாய்பாந்தவத்திமையாலே. (௬)

இறந்துபன்னாருந்தாய்த்தாபெண்ணினுள்கழிந்தபின்றை
யுறந்துமட்டோற்றமுற்றுயுற்றவையுதமாண்டு
விறந்துபல்கிருமியாஞயதற்குமேற்பூனையாகப்
பிறந்துவந்தனையீங்கென்னைப்பிடித்தென்னபயன்றுய்ப்பாயால். (௭)

உனக்கியான்புரோகிதஞ்செய்துறைதத்தோடத்தினாலே
இனக்குறும்வெந்நரகந்துய்த்தேன்இலவிழிபிறப்புமுற்றேன்
மனக்குறன்றமையாலிக்கின்னேயாய்வந்தேனீது
தனக்குமோர்தீர்வுதேடியிருக்கின்றேன்சமையக்காரனேன். (௮)

என்றதுவன்னியுண்மையென்றுகொண்டதுவிலாள
மன்றதுபொருதிலெல்லாமதித்தமர்பாத்துவாசன்
சென்றதுபோகத்தக்கதீர்வுநானுரைப்பெனென்று
நன்றதுகருதிரண்டின்முன்னுறநவிலுகின்று. (௯)

இன்னேயெவெருகேயின்றியானுனக்குமோர்வார்த்தைகேண்மின்
றன்னேயேபூனையாளெனக்கடம்பிரான்மாயூரத்தில்
வென்னேதிராதிரர்போற்றுமிடபதீர்த்தத்தைமேவித்
தொன்னேமேவாமையாடித்தெருலேயுதுக்திமையென்றான். (௧௦)

என்றலுமகிழ்சோதங்கொண்டிடாவுமாயூரமேவிக்
கன்றலிலிடபதீர்த்தங்கலந்துளமுருகிமூழ்க
வொன்றல்செய்பண்டைத்திமையுருவொழிமொழிந்துபோக
மன்றல்செய்தெய்வமேனிவாய்ந்தவல்லிரண்டுமம்மா. (௧௧)

தேவுருபிரண்டுமெய்திச்செம்பொன்செய்கோயின்மேவி
மூவுருமுதலையஞ்சலம்மையைமுன்னிப்போற்றி
யாவுருத்துவசத்தன்றாருள்பெற்றுவானஞ்சென்று
மேவுருத்தேவர்போற்றவிளங்கிற்றிருந்தமாதோ. (௧௨)

பூனையுங்கிளியுமுத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௨௬.

---

# சயதுங்கன்முத்தியடைந்தபடலம்.

ஆரவமலிபுனைசடிலத்தண்ணலாரினிதமரும்
பாவுபுகழ்ப்பெருங்காசிநகராளும்பண்புடையான்
சாவாவிற்பகைகடியுஞ்சயதுங்கனெனும்பெயரான்
புராவுநெறிதவறுதுபோற்றிவாழ்தருநாளில். (௧)

---

* பிருகத்ரதன்—பெரியதேரினன்;
சித் - சித்தெனத்திரிந்துநின்றதுபோல, பிருகத்பிருகத்து எனத்திரிந்துநின்றது.

# தீர்க்கசங்கைமுத்தியடைந்தபடலம்.

தண்ணியகுணத்தான்மிக்கதசரதராமனென்பான்
கண்ணியவிராவணாதியாரையுங்களத்தின்மாட்டிப்
புண்ணியவயோத்திமேவிப்பொலிந்தரசாளுநாளி
லெண்ணியவசுவமேதயாகமொன்றியற்றினானே. (௧)

ஆற்றுமவ்வேள்விகாண்பானட்டகோண்முனிவனாதிச்
சாற்றுபன்முனிவரெல்லாஞ்சார்ந்தனரிருந்தார்பின்னர்
மாற்றும்வெவ்வினையோனையவுரோமசமுனிவன்வந்தான்
றேற்றுமவ்விராமனாதியாவருந்தொழுதாரன்றே. (௨)

அந்தமாமுனியாங்குள்ளவட்டகோண்முனியைத்தாழ்ந்தான்
வந்தநீநாலுகற்பமாண்புறக்கண்டுவாழ்வாய்
பிந்தயான்பாதிகண்டேன்பெரியவனீயென்று
னுந்தன்கிறைஞ்சல்கூடாதெனவுரோமசனிசைப்பான். (௩)

ஆண்டுயர்பொன்றனாலேபெருமைவந்தடையுங்கொல்லோ
வீண்டுநீமாயூரத்திலிவையதாவருடந்தோறும்
வேண்டுமாவிடபதீர்த்தம்விருப்பொடுமாடல்செய்வாய்
ஆண்டுநீயெனக்குமேலோனென்றனன்பின்னுஞ்சொல்வான். (௪)

திராவிடதேசத்தெல்லாவளங்களுந்தெரிந்தமேலான்
பாரவுருண்டிடைப்போர்வாய்ந்தகோத்திரப்படிமையானான்
விராவுநற்குணத்தான்மிக்கவிட்டுணுசாமியென்பான்
றாரதலம்புகழுமன்னான்றன்மனைவிசோமையென்பாள். (௫)

அரிகவிசிவனென்றோர்மும்மைமைந்தர்களவளுக்குள்ளார்
தெரியரியுயர்புதேர்ந்துசெய்வித்தனன்மதலையீன்றோ
னுரியமற்றிருவோர்தாமுமுமுதொழிற்செல்வாரிப்
பிரியம்வைத்திலர்மூன்றோனைத்துரந்தனர்பெயர்ந்துபோக. (௬)

அனையனுமனைவிதன்னையான்றமாதுலனில்லைத்துத்
தனைநிகரிடபதீர்த்தந்துறைகருதலாத்திலாடிப்
புனையுமாயூரநாதன்பொன்னடிதொழுதேவனென்று
வினையுமுன்னெழுந்துபோந்தான்சித்திரகூடஞ்சேர்ந்தான். (௭)

சுடுபசிதாகமேவிவருபவன்றாமங்கண்டு
வடுவறவாழ்வாரிங்குண்டென்றுளமகிழ்ந்துசார்ந்தான்
கடுவிறோராக்கியன்றன்வாவினைக்கண்டுவந்து
படுமறைக்குலப்பெண்ணாதியெதிர்வந்தாள்பண்புகூட. (௮)

காட்டதேடிடுவான்போலப்பயிலுங்காரிகையைநோக்கி
வாட்டநானடைந்தேனன்னாய்மடையுதவிடுவாயென்றான்
வேட்டவாதுனைத்தானென்னாநிறைந்தவனமுந்துவந்து
கோட்டமிலன்னமூட்டித்துயிலெனக்கூறினாள். (௯)

வழிவருவருத்தத்தாலேமிகத்துயின்மறையோனுவி
யொழிவுசெய்திடுவானுள்ளத்துள்ளினனன்னகாலைப்
பழியினையகற்றுமெங்கள்பரம்பரன்மாயூரேசன்
கழியருள்வலியாலோர்வாக்கெழுந்ததாகாயமின்று. (௧௦)

அரக்கிநீமறையோற்கோறலைவற்குறிற்றெரிப்பினிற்சா
ரிரக்கமிலுருவீங்கவினிதருள்சுரக்குமென்ற
ஆரக்கவினடைந்தன்னுருமறையவன்விழித்ததோர்ந்து
பாரக்குமுன்னுருவங்கொண்டுபணிந்தனனின்றுளன்றே. (௧௧)

முனிவனுமச்சமெய்திமுனியும்வல்லரக்கிநீயார்
கனிதருமென்பாலென்னகாரியமுரைத்தியென்னப்
புனிதனேதீர்க்கசங்கையெனும்பெயர்பூண்டுளேன்யான்
துனிசெய்முற்பிறப்பினீட்டுதீவினைசொல்லக்கேண்மோ. (௧௨)

திரைபெறியமுறுநீராஞ்செறிதருமிராமனென்னும்
புரைதவிர்மறையோனின்றபுதல்விவேங்கடியாநாமம்
விரையவொண்டிருட்டினற்குவிழைந்தெனைக்கொடுத்தான்றந்தை
வரையுமென்புருடனில்லில்வாழ்க்கையைமதித்திலாதேன். (௧௩)

மாமனைமாமிதன்னைவைதுபோராடல்செய்வேன்
றாமவெந்தழலேபோலத்தட்டையாய்த்திரிவதோர்ந்து
நாமவென்புருடனோடுநாளும்வேறிருக்குமாறு
காமருகரத்துள்ளார்வைத்தனர்கலாய்த்ததீர. (௧௪)

கொழுநனைப்பேணல்செய்யேன்கொடுமைசெய்துபத்திரிப்பேன்
றழுவொருதினம்பதக்குத்தண்டுலைவடித்துண்டேன்
வழுவிலேன்கொடுமைக்கேங்கிமாண்டனன்புருடனன்பான்
கழுதுறங்கிருமுறாங்காதுழிதருகடன்மைபூண்டேன். (௧௫)

இச்சையிற்றிரிந்தபன்னாளிரும்பொருளீட்டல்செய்து
வச்சையிக்கடைந்தேன்பின்னுட்காவுப்பொருளைவௌவக்
கொச்சையுற்றிறந்தேன்பொல்லாக்கொடுநரகுழன்றுபின்னுட்
பச்சையூனுகாமிக்குமரக்கியாம்படிவம்வாய்ந்தேன். (௧௬)

இதுதவிர்கழுவாய்நீயொன்றியம்பிடுவாயென்றுன்
முதுபுகழ்மறையோனோர்ந்துமுனிவறவென்பின்வந்தாற்
கதுமெனவொழிப்பேனென்றுகரைந்தனனெழுந்துசென்று
னதுதெரிதீர்க்கசங்கையரக்கியுந்தொடர்ந்துசென்றாள். (௧௭)

மறையவன்மாயூரத்துவந்தனனிடபதீர்த்தந்
துறையினையடைந்துபார்த்தான்றொடரிராக்கதியைக்கண்டா
னிறைபுனலிதனின்மூழ்கினீங்குமிப்பிறவியென்று
னறைதாறலைமேற்கொண்டாங்கரக்கியுமூழ்கினளே. (௧௮)

முழுகலுமிழிந்தயாக்கைமோசித்துத்தெய்வயாக்கை
பழுதறவடைந்தாணின்றபனவனைத்தொழுதாள்வள்ளல்
செழுமலர்ப்பாதத்தோடுதேவிபொற்பதமும்போற்றி
யொழுகொளிவிமானமேற்கொண்டுற்றனள்சுவர்க்கத்தம்மா. (௧௯)

சிரித்தகாலையிலவர்சினந்துநீ, பரித்தவெம்முருப்பார்த்துநக்கனை
விரித்தவுண்மைதேர்ந்திலைமேதக, வரித்தமானிடமாகியெனறனர். (௨)

என்றகாலையஃதெய்தமற்றவள், கன்றவந்தனுகழியுமாறெருரு
நன்றறைந்திடுமெனநவின்றனள், ளொன்றமற்றவருணர்ந்தனமேயினார். (௩)

முன்னரத்திரிமுனிவனுதியர், மன்னவேவார்வனம்வதியுங்காலையி
லன்னரஞ்சவாயழல்கொள்பேயொன்று, அன்னமற்றதைநோக்கிச்சொல்லுவார்.

கொள்ளிவாய்க்குணங்குருவுகொண்டநீ, யெள்ளியிங்குறற்கேதுவோதென
நள்ளுநான்மறைக்குலத்துநங்கையா, ளுள்ளுங்காந்தநேருற்றுவாருநாள். (௫)

அவனையெள்ளிமிக்கவமதித்திடு, சவலைநீர்மையேதாய்கியாழ்ந்தனன்
கவலைகூருமக்கடியபாவத்தாற், றவலிலாதவில்வுருவந்தாங்கினன். (௬)

ஈதுதிருமாதியம்புவீரென, வோதுகொள்ளிவாய்ப்பேயுரைத்தது
சாதுவாமுனித்தலைவரோர்ந்தனர், காதும்வெவ்வினைகழியவோதுவார். (௭)

தடமமைந்தமாயூரஞ்சார்ந்துநீ, யிடபதீர்த்தநன்கினையமூழ்கினாற்
படவராப்பணிப்பரமனாரருள், ருடன்விராவநீதொழிந்துவாழ்குவாய். (௮)

என்றுகூறவங்கெய்திமூழ்குபு, நன்றுபெற்றதுநீயுநல்லணியாய்.
கொன்றுகாதலினுருகிமூழ்கினாற், றென்றுமேவுருவுறுமெனச்சொன்னார். (௯)

சொற்றபோதுபாதிதுணிந்தவன், றுற்றமேவுமாயூரமன்மயிலால்
கற்றமேதையோர்களையுமப்புனல், வெற்றமேவுறவிரைந்துமூழ்கினான். (௰)

முன்னுருக்கொடுமூக்கனாயகன், றன்னுருத்தரித்துவந்துபோய்ப்
பொன்னுருப்பெறும்பொற்பினாயகன், பின்னுருத்தமூடம்வாழ்க்கைமேயினான். ()

கலைமகள்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆகு-திருவிருத்தம் ௩௩௰.

# இடபவரலாற்றுப்படலம்.

கரும்பினுமினிக்குமாறுகனைதருகுற்பாரா
வரும்புறுமிடபதீர்த்தமெனப்பல்காலறையாநின்றாய்
விரும்புறுமப்பேர்பொன்னித்துறையுற்றவிதமென்னென்று
பெரும்புலமுனிவர்கேட்பப்பேசுமச்சூதமேலோன். (௧)

கயிலையங்கிரியின்மேயகண்ணுதன்மாயூரேசன்
மயிலுருவமைந்துதேவிவசித்தநாளண்டமூற்றும்
பயிலொருவிநோதத்தாலேபார்த்தனன்மீள்வானென்னவி
வெயில்விடுமணிப்பொற்கோட்டுவிடையெனும்வாமேற்கொண்டு, (௨)

மலர்மிசையிருக்கையானும்வாரிதிக்கிடக்கையானும்
பலர்புகழ்தானவேந்தும்பண்ணவர்மற்றுளோரு
மலர்தருதத்தமூர்தியிவர்ந்துடனணையுமாறு
கலர்கொளாக்கருணைநல்கிக்கடவினானேற்றையம்மா. (௩)

